MADRAS GOVERNMENT ORIENTAL SERIES.

2250

Published under the authority
of
the Government of Madras.

GENERAL EDITOR:

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
*Curator, Government Oriental Manuscripts Library,*
*MADRAS.*

No. XXXIX.

# கொங்கணர் சரக்கு வைப்பு
# நூறு.

தஞ்சை ஸரஸ்வதீ மஹால் வெளியீடு. நெ. 25.

# கொங்கணர் சரக்கு வைப்பு

## (நூறு)





பதிப்பாசிரியர்கள் :

K. வாஸுதேவ சாஸ்திரி B. A.,
ஆராய்ச்சியாசிரியர், ஸரஸ்வதி மஹால்.

Dr. S. வெங்கட்டராஜன், L. I. M. (Regd.)
ஆயுர்வேத பண்டிதர், ஸரஸ்வதி மஹால்.



தஞ்சை ஸரஸ்வதீ மஹால் நிர்வாகக் கமிட்டியினருக்காக
கௌரவக் காரியதரிசி

ஸ்ரீ S. கோபாலன், B. A., B. L.,

அவர்களால் வெளியிடப்பட்டது.



மகாலிங்கம் மின்சார அச்சகம், தஞ்சை.

1951.

விலை ரூ. 1—0—0.

# PREFACE.

The present publication is the first of its kind in our series. It deals with chemical processes for the synthetic manufacture of some vegetable and mineral drugs that are in constant use in our indigenous systems of medicine. Although we have scores of treatises dealing with chemical processes of this kind, more especially in Tamil, no attempt has been made at a systematic study of all the texts, and regular research in institutions open to students of medicine. These processes have been always kept as a secret lore, and the texts themselves abonnd in cryptic technology that can be understood only by specially initiated disciples.

What with the waning faith of our students in our ancient texts, and the want of encouragement to the ascetic order following the path of the *Siddhas*, the whole system of chemical and atomic processes which was the exclusive property of the community of *Siddhas* has now fallen into disuetude. This has given rise to many an impostor claiming to possess the secrets of these processes.

It is therefore the duty of institutions like the Saraswathi Mahal to bring to light the existing texts on these chemical processes, so that systemetic research may be untertaken by students interested in the subject.

The present work contains one hundred verses giving synthetic processes for the manufacture of drugs. The work is very rare and valuable. There are no other manuscripts of the work available except the one preserved in the Sarasvathi Mahal. It has therefore been thought fit to include this among the first series of publications of the library. Parallel passages in other available works relating to the drugs treated of in the work, have been printed as appendices. The editors of the work have been engaged in editing the medical manuscripts of the library for some years past, and have edited this work with their usual zest. It is hoped that this work will serve as a hand-book for students of research and medical practitioners.

Our thanks are due to the Government of Madras for their liberal grants that have enabled us to publish this and other valuable mauscripts of the Library.

Saraswathi Mahal Library,
Tanjore.
Dated 10-2-51.

S. GOPALAN,
*Honorary Secretary.*



# GENERAL INTRODUCTION

## TO THE

# Madras Government Oriental Series.

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in different languages on subjects like Philosophy, Medicine, Science, etc., early in May 1948. Important manuscript libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore, alone complied with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10 Education, dated 4-4-1949, constituted an Expert Committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary, for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publication.

The following are members of the Committee:

1. Sri T. M. Narayanaswami Pillai, M.A., B.L.,
2. „ R. P. Sethu Pillai, B.A., B.L.,
3. „ C. M. Ramachandra Chettiar, B.A., B.L.,
4. Sri R. Krishnamoorthy, (Kalki)
5. Dr. N. Venkataramanayya, M.A., PH.D.,
6. Sri M. Ramanuja Rao Naidu, M.A., L.T.,
7. „ V. Prabhakara Sastri,
8. „ N. Venkata Rao, M.A.,
9. „ H. Sesha Ayyangar,
10. „ Masthi Venkatesa Ayyangar, M.A.,
11. „ M. Mariappa Bhat, M.A., L.T.,
12. Dr. C. Achyuta Menon, B.A., PH.D.,
13. „ C. Kunhan Raja, M.A., D. PHIL.,
14. „ A. Sankaran, M.A., PH.D., L.T.,
15. Sri P. S. Rama Sastri,
16. „ S. K. Ramanatha Sastri,
17. Dr. M. Abdul Haq, M.A., D. Phil. (Oxon),
18. Afzul-ul-Ulma Hakim Khader Ahamed,
19. Sri P. D. Joshi,
20. „ S. Gopalan, B.A., B.L.,
21. „ T. Chandrasekharan, M.A., L.T.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Marathi and Islamic Languages. They met during the month of May, 1949, at Madras and Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the Government in G. O. No. Mis. 2745 Education, dated

31--8—1949 and they decided to call these publications as the **"Madras Government Oriental Series,"** and appointed the Curator, Government Oriental Manuscripts Library, Madras, as the General Editor of the publications.

The following manuscripts have been taken up for publication during the current year:

## "A" From the Government Oriental Manuscripts Library, Madras.

### TAMIL

1. Kappal Sattiram
2. Anubhava Vaidya Murai
3. Attanakolahalam
4. Upadesa Kandam
5. Colan Purva Pattayam
6. Konga Desa Rajakkal
7. Sivajnana Dipam
8. Sadasiva Rupam, with commentary.

### TELUGU.

1. Sangitaratnakaramu
2. Aushadha Yogamulu
3. Vaidya Nighantuvu
4. Dhanurvidya Vilasamu
5 Yoga Darsana Vishayamu
6. Khadga Lakshana Siromani.

## SANSKRIT.

1. Vishanarayaniyam
2. Bhargava Nadika
3. Hariharacaturangam
4. Brahmasutravrtti—Mitaksara
5. Nyayasiddhanta Thattvamrtam.

## MALAYALAM.

1. Garbha Cikitsa
2. a. Vastulakshanam
   b. Silpasastram
   c. Silpavishayam
3. Mahasaram
4. Kanakkusaram
5. Kriyakramam

## KANNADA.

1. Lokopakara
2. Rattamata
3. Asvasastram
4. a. Aushadhagalu
   b. Vaidyavishaya
5. Sangitaratnakara
6. Supasastra.

## ISLAMIC LANGUAGES.

1. Jamil-Al-Ashya
2. Tibb-E-Faridi
3. Tahqiq-Al-Buhran
4. Safinat-Al-Najat.

# "B" From the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore.

## TAMIL.

1. Sarabhendravaidya Murai (Diabetes)
2. Do. (E N. & T.)
3. Konkanarsarakku Vaippu
4. Tiruccirrambalakovaiyar with Padavurai
5. Sarabhendra Vaidya Murai— (Anæmia & Jaundice)
6. Talasamudram
7. Bharatam
8. a. Pandikeli Vilasa Natakam
   b Pururava Cakravarti Natakam
   c. Madana Sundara Vilasa Natakam
9. Percy Macqueen's Collection in the Madras University Library on Folklore
10. Ramaiyan Ammanai
11. Sarabhendra Vaidya Murai — (Asthma, Cough and other lung diseases)

## TELUGU.

1. Kamandakanitisaramu
2. Taladasapranapradipika
3. Raghunatha Nayakabhyudayamu
4. Rajagopala Vilasamu
5. Ramayanamu by Katta Varadaraju

## MAHRATHI.

1. Natyasastrasangraha
2. a. Folk Songs

b. Dora Dharun Veni Paddhati
c. Asvasa Catula Dumani
3. Pratapasimhendra Vijaya Prabandha
4. a. Sarabhendra Tirthavali
b. Lavani
5. Devendra Kuravanji
6. Bhakta Vilasa
7. Sloka Baddha Ramayana

## SANSKRIT.

1. Asvasastra with Tricolour Illustrations
2 Rajamrganka
3. Ananda Kandam
4. Ayurvedamahodadhi
5 Gita Govinda Abhinaya
6 a. Colacampu
b. Sahendra Vilasam
7. Dharmakutam-Sundara Kanda
8. Jatakasara
9. Vishnutattvanirnaya Vyakhya
10. Sangita Darpanam
11. Bijapallavam

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them

with other copies The editors have however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the foot-notes except in the case of a few books, in which the correct readings have been given in the foot-note or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in Selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the press. The various presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

MADRAS,<br>1951.

T. CHANDRASEKHARAN,<br>*General Editor.*

*Note:*—In list "B" above, No. 5 and 11 in Tamil, and No. 3 in Sanskrit were substituted for three works of the original list, wnich were found later, to be unsuitable for publication. The substitution awaits approval by the Government.

# முகவுரை.

சிகித்ஸைகள் 'தாந்த்ரிகம்' என்றும் 'ஆர்ஷம்' என்றும் இருவகைப்படும். ஆர்ஷமுறைகள் ஆத்ரேயர், தந்வந்தரி, பரத்வாஜர், காச்யபர், சரகர், ஸுச்ருதர் முதலான மகரிஷிகளால் சொல்லப்பட்டவை. இச்சிகித்ஸை முறைகள் பெரும்பாலும் மூலிகைகளைக்கொண்டே செய்யக்கூடியவை.

மஹா சைவதந்த்ரம், ருத்ரயாமளம், தத்தாத்ரேய தந்த்ரம் போன்ற தந்த்ரக்கிரந்தங்களும், அவற்றைத் தழுவிய சித்த பரம்பரையாளர் எழுதிய நூல்களும் மற்றொரு வகையைச் சார்ந்தவை. இவ்விருவகை நூல்களும் மிகப்புராதனமானவை. இவற்றில் மகாரஸங்கள், உபரஸங்கள், உலோகாதிகள் முதலியவைகளைக்கொண்டும், திவ்ய மூலிகைகளைக் கொண்டும் சிகித்ஸை முறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றில் சொல்லப்பட்ட முறைகள் பலவும் சித்தர்களின் உபயோகங்களுக்காகவே கூறப்பட்டுள்ளதால், இதிலுள்ள செய்முறைகளும், திவ்ய மூலிகாப் பிரயோகங்களும் சித்த பரம்பரையிலுள்ள குருவின் ஒத்தாசையில்லாமல் கண்டு பிடிக்க முடியாதவை.

இவ்விருவகை நூல்களிலுள்ள பல முறைகள் தமிழ் வைத்ய நூல்களிலும், வாத நூல்களிலும் காணப்படுகின்றன. ஸம்ஸ்க்ருதத்திலும் சரி, தமிழிலும் சரி, பல புராதன நூல்கள் காணமல் போய்விட்டபடியால் இந்நூல்களில் எவை முதல் நூலென்றும் எவை சார்பு நூலென்றும் நிச்சயிப்பது எளிதல்ல. ஆனாலும் இவைஒன்றுக் கொன்று உதவிபுரியக்கூடியவைகளாகவே இருக்கின்றன. இவைகள் இரண்டிலும் அடிப்படைத்தத்துவங்கள் ஒன்றே;

செய்முறைகளிலும் ஒற்றுமைகள் பல காணப்படுகின்றன. ஆகையால் தமிழில் விளங்காத நூலின் பொருளை அதே விஷயத்தைப்பற்றிய ஸம்ஸ்க்ருத நூலைக்கொண்டு சந்தேக நிவர்த்தி செய்துகொள்ளலாம். அதைப்போலவே ஸம்ஸ்க்ருத நூலில் தெளிவுபடாத இடங்களைத் தமிழ் நூல்களைக் கொண்டு தெளிவாக்கிக் கொள்ளலாம். தற்காலம் சித்த பரம்பரைகளிலுள்ள ஆசிரியர்கள் கிடைப்பது அருமையாகி விட்டது. போலி ஆசிரியர்கள் மலிந்துவிட்டனர். இந்த நிலைமையில் சித்தர்கள் நூல்களை ஆராய்ச்சி செய்வதற்கு இருபாஷைகளிலும் உள்ள நூல்களையெல்லாம் தேடி, நாமே ஆழ்ந்ததோர் ஆராய்ச்சிசெய்து உண்மைகளைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் சித்த நூல்களை ஏட்டுச்சுவடிகளிலிருந்து கூடியவரை பரிசோதித்து அச்சிடவேண்டியது நமது முதற்கடமையாகும்.

அம்முயற்சியில் இப்போது வெளியிடப்பட்டிருக்கும் "கொங்கணர் சரக்குவைப்பு நூறு" என்ற இந்த நூல் சரஸ்வதி மகால் தொகுதியில் முதலாவதாகும். இந்த நூல் இதுவரை அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இதன் பிரதி ஒன்று சரஸ்வதி மகாலிலிருந்து வருகிறது. மற்ற இடங்களில் இதன் வேறு பிரதிகளும் இருப்பதாகத் தெரியவில்லை. பரிசோதிப்பதற்கு வேறு பிரதிகள் கிடைக்காததால் இந்த நூலைச் சுவடியிலுள்ளபடியே அச்சிடப்பட்டிருக்கிறது. இதில்கண்ட வைப்பு முறைகளைப்பற்றி மற்ற சித்தர் நூல்களிலுள்ள பகுதிகள் அநுபந்தங்களாகப் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன.

இந்த நூலில்காணப்படும் பரிபாஷைச் சொற்களை ஐயந்திரிபற உணர்வதற்குப் பல அனுபவசாலிகளின் ஒத்தாசையைக்கொண்டு ஆராய்ச்சிசெய்து, செய்முறைகளைப் பரீக்ஷித்து நிச்சயிக்கவேண்டியிருப்பதாலும், அவ்வித

ஆராய்ச்சிக்கு இதன் மூலப்பதிப்பு ஒத்தாசை செய்யக்கூடிய தாகையாலும் இப்போது இந்நூல் உரையின்றி பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. இவற்றின் பொருளைப்பற்றிய ஆராய்ச்சி முடிந்தபின்னர் உரை வெளியிடப்படும். இந்த நூல் விஷய மான பரிபாஷைச் சொற்களைப் பற்றியோ, செய்முறைகளைப் பற்றிய நுட்பங்களைப் பற்றியோ அனுபவசாலிகள் தங்களுக்குத் தெரிந்த அரிய விஷயங்களை எங்களுக்குத் தெரிவித்தால் அவை நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

**பதிப்பாசிரியர்கள்.**





# பொருளடக்க அட்டவணை.



# அநுபந்தம்.

முற்றிற்று.

உ

# கொங்கணர் சரக்கு வைப்பு நூறு.

ஆதியந்தமில்லாத வெளியுந்தாண்டி
அகண்டுநின்ற போகருட பதத்தைப்போற்றி
சோதியென்ற சின்மயத்தின் ஆயிபாதம்
துலங்கியதோர் ரிஷிகளுட பாதம்போற்றி
நாதமென்ற சுந்தரமே சொல்லக்கேளு
நன்மார்க்க முறையதுவே யறிந்துசொல்வேன்
நீதமென்ற ஆயியுட பாதந்தன்னை
நினைவுகெட்டுச் சொல்லாதே நிலத்துள்ளோர்க்கே. (க)

நிலத்துள்ளோர்க்கெத்தனைதான் சொன்னாலுந்தான்
நேராது பொய்யென்பார் கசட்டுமாந்தர்
நிலத்துள்ளோர் மாய்கையிலே அழிந்துமாதா
நினைவுக்குள் கலந்துநிற்பார் சையோகத்தில்
நிலத்துள்ளோராறுதலங் காணமாட்டார்
நிலையான சமாதியிலே யுரை(றை)க்கமாட்டார்
நிலத்துள்ளோரமிர்தத்தைப் பானம்பண்ணார்
நிலையான குருபதத்தை நேராய்க்காணே. (உ)

நேரார்கள் காயத்தைச் சித்திபண்ணி
நீடியதோரஞ்சுவகை தீட்சைகேளார்
பாரார்கள் வாதத்தை யூடுபாய்ந்து
பாலகனே குளிகையிட்டுக் கமனம்போகார்
சேரார்கள் ஆயியுடவா மத்திற்றானுஞ்
செகத்திலே பூசைசெய்வார்க் கியங்கவேண்டி
வாரார்க ளாறுவரை தன்னைவிட்டு
மைந்தனே சொல்லாதே மகிழ்ந்துபாரே. (ந)

பாரப்பா இந்தவிதஞ் சொன்ஞரில்லே
பரிவான நாதாக்கள் சொல்லார்சொல்லார்
நேரப்பா எனக்குரைத்த ஆயிபாதம்
நிலேயான முன்னூலின் சொன்னேனில்லே
காரப்பா இதில்சூட்ச(ம்) சொன்னேன்பாரு
கண்டுசொன்னேனுருகாதி வைப்பைத்தானும்
வாரப்பா இந்தமுறை ஒளித்தார்சித்தர்
மைந்தனே செவித்திட்டேன் செவித்திட்டேனே. (ச)

செவித்திட்ட இடங்கண்டு ஆதிசித்தர்
சேர்த்தேவல் செய்தார்களனேகங்கால
மவித்திட்ட குளிகை முதலாறுதானும்
பாலகனே கேட்டதெல்லா மீவாரீவார்
குவித்தநூல் வைத்திருந்தோர் மனதுநொந்தால்
கூடாது சித்தியொன்று புண்ணியானந்தம்
பலித்தவர்க்குக் கிடைப்பதல்லால் மற்ருேர்க்குக்கிட்டா
பார்ப்பவர்க்கு எளிதான பாதை பாரே. (ரு)

எளிதாக இந்தனூல் வாராதப்பா
ஈந்தாக்கால் கலியுகத்தில் நூற்றுக்கொன்று
தளிவாக வெளியில்லாச் சாபம்போட்டேன்
சற்குணர்க்குக் கிடைப்பதல்லால் பாவிக்குக்கிட்டா
சுளிவான இந்தநூல் பெருகாவண்ணஞ்
சுந்தரமே வெகுபதன(ம்) சொன்னேன்சொன்னேன்
வளியாக நாதாக்கள் கருவைச்சொன்னேன்
மைந்தனே சொல்லாதே மகிழத்தானே. (சு)

தானென்ற ஆதிமுதல் சரக்கைக்கேளு
தரணிதனில் பிறக்கின்ற உப்பிஞேடு
ஊனென்ற கல்லுப்பு ரெண்டுபங்கு
உத்தமனே பழச்சாறும் தயிரும்வார்த்து
கோனென்ற பாண்டத்தி விட்டுமூடிக்
குறிப்பாகப் புறந்தனிலே சாணியப்பி
ஆமென்ற ஆவினுடபதியில் தாக்கு
அப்பனே மண்டலத்தில்ச் சீனமாச்சே. (எ)

ஆச்சு சீனத்தோடு சூடனாச்சு
அதிலுத்த வெங்காரப் பலகையாச்சு
நீச்சப்பா துருசோடு பாஷாணமாச்சு
நேராகச் சரக்கெல்லா மிதிலேயாச்சு
பாச்சப்பா வாதத்துக்காதிபீடம்
பண்பான வழலைக்குமாதிபீடம்
போச்சப்பா வாதமென்ற வேதைதாண்டிப்
புண்ணியனே கைமுறையாய்ப் புகழ்ந்துசெய்யே. (அ)

செய்திடுவாய் வெங்காரப் பலகைதானும்
சிறந்துநின்ற பூரணத்தின் வைப்பைக்கேளு
கைதிடுவாய்க் கஞ்சனுட நாதத்தில்நாதங்
கரையான சீனமது காலுங்கூட்டி
அய்ந்திடுவாய் *அரம்பையில் மூலமோடு
அரிதான சிதம்பரத்தின் பானங்கூட்டி
நோய்த்திடுவாய் யெரித்திடுநீ சாமந்தன்னில்
உத்தமனே சூடனது வுகந்துபாரே. (கூ)

பாரப்பா ரவியினுடபீச மென்பார்
பராபரமாம் வித்தையிது சூடன்வித்தை
நேரப்பா பூரவிட்டால் வேதைபோச்சு
நிலையான சுன்னமது கோடாகோடி
சேரப்பா குளிக்கைக்கு ஆதிமூலம்
சேர்ந்துநின்ற காயசித்திக்காதிமூலங்
காரப்பா பூரத்துக்காதிபீடங்
கரையான வெங்கார வைப்புக்கேளே. (ய)

வைப்பான லவணத்தி லிரண்டுகூட்டி
மைந்தனே படிகமது இரண்டுந்தானுந்
தயிப்பான குன்றிமணி உளுந்தின்தூளும்
நலமான கள்ளிப்பால் வார்த்துக்கிண்டி

---

* அரம்பை — வாழை.

தெய்ப்பான பாண்டத்தி லிட்டுமூடி
நேரான *மால்தேவிக்கிளையாள்(ன்) கூட்டி
யேர்ப்பாக மண்டலந்தான் கடந்துவாங்கி
உத்தமனே பலகையது உரைத்தவாறே. (மக)

வாறான காரத்தில் சரக்குக்கோடி
மைந்தனே உருக்கினமுங் கோடாகோடி
தேறான தூரமுதல் வேதைகோடி
சேர்ந்துநின்ற சத்துவகை சிணத்தில்கோடி
காறான சுண்ணந்தான் கோடாகோடி
கடியதொரு செயநீரு மெழுகுகோடி
தாரான இன்னமொரு வகையைச்சொல்வேன்
சாதுரிய வெங்காரச் சவுரிதானே. (மஉ)

தானான உளுந்தினுட மாவில்தானும்
தனித்தஇந்த யிணங்கனுக்குச் சினமிரண்டு
ஊனான கள்ளிப்பால் விட்டுநன்றாய்
உத்தமனே பாண்டத்தி லிட்டுமூடி
கோனான காரத்தில்வைத்து மைந்தா
குறிப்பான மண்டலந்தான் கடந்துவாங்கு
கானான துய்யநிறம் வெங்காரமாச்சு
கருதிபம்பார் ரிதையறியார் கலந்துசேரே. (மங)

சேர்வான சாரத்தின் வைப்பைக்கேளு
சேர்ந்துநின்ற கரிமாவுஞ்மயங் கொடுவாடும்
நேர்வான ஒட்டகமுங் கத்தகமுமெல்லா
நிலையான அமுரியொடு மயிடமென
கார்வான வெடியுப்புகல்லுப்புத்தானுங்
கலந்தரைத்துப் பூமிக்குப் புடத்தைப்போடு
தார்வான சாரமதுகடுஞ்சாரமப்பா
காட்டுமுன்னே சரக்குகளுக் கடியதாமே. (மச)

---

* மால்தேவிக்கிளையான் — மால்மைத்துனன் — துருசு.

கடிதான வழலையென்பாரிதை நாதாக்கள்
கையறியார் வடுகனுட நாதந்தானும்
பொடியாகச் செய்வதற்கு வங்கமைந்தா
போக்கான கெவனமென்ற குளிகைக்காதி
வடிவான ஆயியுடநாதத்தைக் கொல்ல
மைந்தனே வல்லோர்காண் வாதத்துக்காதி
துடியான சாரத்தையறிய மாட்டார்
சுட்டறியார் சுட்டதினல் சுழலுவாரே. (ருரு)

சுளியான துருசியுடதுரையைக் கேளு
சொர்ப்பெரிய வெடியுப்புகல்லுப்பு சீனம்
ஒளியான பழச்சாறு தயிருவார்த்து
உத்தமனே கழுதையுடகத்தம் வார்த்து
தெளிவான செம்பாலே பாத்திரம்போற்பண்ணி
நேரான கழுதையுடலெத்தி போட்டு
அழிவான பூமியிலேபோட்டு மூடி
ஆறுதிங்களானபின்பு யெடுத்துப்பாரே. (ருசு)

பாரப்பா இதிஞலே யண்டாண்டமாடும்
பாரார்கள் ஊடுருவிப் பரப்பில்லாமல்
காரப்பா கருக்கூட்டிச் சொன்னேன்முன்னே
கைமுறையை யறியாமற் கலங்கிஞர்கள்
நேரப்பா பெண்ணென்று பாத்தாஞல்
நிலைக்குமே வாதந்தான் நினைவைப்பார(ா)ர்
சேரப்பா ஆயியுட பாதந்தன்னில்
செகத்தை வென்றவாமத்தை பூசைசெய்யே (ருஎ)

பூசைசெய்வாராசையிஞற் புகழ்ந்துசெய்யார்
புண்ணியனே விட்டகுறை எய்தவேணும்
பாசமில்லாக் குருதொட்டுக் காட்டவேணும்
பாலகனே நிர்மலத்தைப் பணியவேணும்
நாசமென்ற பெண்ணாசை யொழியவேணும்
நலமான சத்தியத்தை நிறுத்தவேணும்
கோசமென்ற தோசத்தை யறியாமூடர்
குலாவியதோர் பீசத்தைக் கூடுவாயே. (ருஅ)

கூடுவாய் கருவெல்லா மிதனுலாச்சு
கூறியதோர் கோசத்தில் முழுதுமாச்சு
நாடுவா ரிதையறியார் சொன்னுல்மைந்தா
நலமான சீனத்தை யறியார்மூடர்
போடுவா யிதனாலே அண்டாண்டமட்டும்
புகழேது புகழேதுசொல்லப் போகா
நாடுவாய் சீனமென்ற பாஷாணத்தை
நலமாக வைத்தெடுக்கத் துறையைக்கேளே (யகூ)

துறையான அயத்தாலே பாத்திரந்தான்
துணிவாக வாட்டாகப் பண்ணிப்பின்பு
குறையாமல் வெடியுப்பு சமனுய்வாங்கி
கூசாமல் சீனமதுகாலுங் கூட்டி
மூறிவான வெண்கருவும் பன்னிநெய்யில்
மூதிராமல் சிறுதீயாலெரித்துக் கொண்டால்
மறிவாக முருகியல்லோ பாஷாணமாகும்
மைந்தனே கைமுறையை மகிழ்ந்துபண்ணே. (உய)

பண்ணப்பா இதனுலேவங்கங் கட்டும்
பார்டியதோர் செம்புமுதலெல்லாங் கட்டும்
நண்ணப்பா செயநீர்க்குமாதிபீடம்
நாதாக்கள் சொல்லார்கள் மாவினுதம்
ஒண்ணப்பா உருகியிது வாதத்துக்காதி
ஓகோகோ துறைக்கெல்லா மிதுவேஆதி
துண்ணப்பா சீனமென்பார் வெண்கண்டரென்பார்
துறையறிந்து யிதுக்கெல்லா மறிந்துபாரே. (உக)

அறிவான கெவுரியுட முறையைக்கேளு
அப்பனே லவணமொடு நாகந்தானுங்
குறியான படிகமுடன் பன்னிநெய்யுங்
கூறியதோர் மஞ்சளென்ற கருவுங்கூட்டி
நெறியாக எரித்திடுநீ உறுகிச்சேர்ந்து
நேராக கெவுரியது சரக்கேயாச்சு
தறிவான இதின்போக்கு என்னசொல்வேன்
தங்கத்தை யிட்டெடுத்தால் தாயென்பீரே. (உஉ)

தாயானகெவுரி யுடவெங்கஞ் சொல்லித்
தாயார்க்குச் சொல்லரிது தாக்கிப்பார்க்கில்
சேயான பூசிங்கியென்பார் வீரமென்பார்
சிலையிடத்திற் றுறையறிந்து சேரும்சேரு
மாயான மடபதிகள் வெளியிற்சொல்லார்
மைந்தனே யறிந்துகொள்ளு மயங்கவேண்டாம்
தாயான தொட்டியுட முறையைக்கேளு
சொல்லரிது சொல்லார்கள் சூட்சந்தானே. (உங)

சொல்லுகிறேன் சீனமொடு சீனக்காரம்
சொல்லரிது ஆயியுட நாதந்தானும்
மல்லுகிற வெடியுப்புச் சூதங்காலும்
மைந்தனே நாகமொடு நாகந்தானும்
சொல்லரியாக் காந்தமொடு வெண்கருவாலாட்டித்
துணிவாகச் சட்டிக்குள் வைத்துமூடி
வல்லுகிற சீலைசெய்து யெரித்தாயானால்
வாகான தொட்டியென மகிழ்ந்துகாணே. (உச)

காணப்பா இதின்சுருக்குச் சொல்லமாட்டேன்
காணறியா நிர்மலமுங் கலங்கும்வாறும்
தோணப்பா பராபரத்தின் நாதமென்பீர்
சொல்லரிது தூமமென்ற வேதைகோடி
பூணப்பா கடுங்காரம் பூரமென்பீர்
புகழான தாரமென்பீர் பாஷாணமென்பீர்
காணப்பா கருமறைத்து நாதாக்கள்சொல்லார்க்
கைமுறையாய்க் கெந்திக்கி கெவுரிபூட்டே. (உரு)

*பூட்டறியார் பூட்டதினால் வாதம்போச்சு
பொன்னாசை தன்னாலே யோகம்போச்சு
மீட்டறியாப் பிருணயதீட்சை யில்லால்
மின்னான கர்ப்பமில்லால் காயசித்திபோச்சு
கேட்டறியா ரதினாலே சமாதிபோச்சு
குலாவியதோரமிர்தமென்ற பானம்போச்சே. (உசா)

---

* இச்செய்யுளில் ஒரு அடி காணவில்லை.

போச்சப்பா தரித்திரங்களென்ற பீடை
புகழான கெந்தியுட முறையைக்கேளு
பாச்சப்பா பாண்டத்தில் கெந்தியிட்டு
பரிவான திருமேனிச்சாற்றால் தானும்
வாச்சப்பா வெடியுப்புச் சீனந்தானும்
வாகான மேதை(தி)யுட தயிரும்வார்த்து
நீச்சப்பா யேரண்டத்தின் விரையும்போட்டு
நேராகக் கிண்டியதைவைத்துக் கொள்ளே. (உஎ)

வைத்ததிலே தேத்தான்விரையைப் போட்டாயானால்
வாகாகச்சி (க்ஷ)ணத்திலே தெளிந்துபோகும்
கைத்ததிலே மேனியிலைச்சாறுஞ் சூதங்
கண்டுகொள்ளு *மல்லமொன்று கருதித்தாக்கி
யுத்தமொரு பூமிக்குள் புடந்தான்போடு
யுத்தமனே மண்டலந்தான் கடந்துவாங்கி
நைத்ததிலேகெந்தி யென்றதிதுவேகெந்தி
நாதாக்கள் உள்க்கருவை நயந்துசொன்னார். (உஅ)

சொன்னதிலே கெந்திமுறை சொன்னபோது
துடந்தல்லோ கோபித்தார் மடபதிகளெல்லாம்
மென்னடாமதிகெட்ட கொங்கணனே இந்த
முறை வெளியில்துறந்துநீ யியம்புவாயோ
ஒன்னறியா வுள்க்கருவு சொல்லப்போமோ
ஓகோகோ வென்றுசொல்லிச் சண்டையிட்டார்
தண்மையாய்ச் சட்டைமுனியிருந்ததினால் மைந்தா
தாக்கியல்லோ பிரதிசொல்லி யடைத்திட்டாரே(உகூ)

அடைத்திட்ட விதங்கண்டு வுலகத்தோர்கள்
அவரவர்கள் கருவறிந்து பெருகிப்போமென்
றடைத்திட்ட நம்முடைய பேரும்போகும்
நலமாக அதினாலேசொன்னோ மென்றார்

---

* மல்லம் — வெள்ளைப்பாஷாணம்.

உரைத்திட்டேனதிலே கவிநூற்ருென்று
　　ஓகோகோ பெருகாத வண்ணமாக்கிக்
குடைத்திட்ட சரக்கிஞேடு கிடைப்பதென்று
　　கோபித்தாலல்லவோ சாபித்தேனே. (௩௦)

சாபித்தவிதங்கண்டு சித்தரப்பா
　　சட்டைமுனி நூலிந்தநூலைப்போலே
ஆவித்ததொரு நூலும் வாராதய்யா
　　அரிதரிது என்றுசொல்லிப் பதனமப்பா
தேவித்த கெந்தியுட பெருமைசொல்ல
　　நிர்மலத்தி லரிதரிது நேந்துபாரு
ஓதிவித்த குருவென்பார் ஆயிநாதம்
　　உத்தமனே உரைக்கரிது உரத்தோர்மேலே. (௩௧)

மேலானவிதுவெல்லாஞ் சேர்த்துவாங்கி
　　மேகமென்றசூதத்தை மணியாய் வாங்கி
கலலானசெருவை யெல்லாஞ்சேர்த்துக் கொண்டு
　　காரணமா யூதியல்லோ சாறணையைத்தீர்பார்[1]
[2]யிர்லோகலூதியல்லோ மணியாய்வாங்கி
　　யுத்தமனே அண்டரண்ட கெவன(ம்)போவார்
நாவான சுந்தரமேசொல்லக் கேளு
　　நவமான சவ்வீரவைப்பைக் கேளே. (௩௨)

கேளப்பா வெடியுப்புநாலு திரங்காச்சி
　　கெடியான நாயுருவி வெள்ளருகு வேலை
நாளப்பா யெள்ளுடனே கதலிமூலம்
　　நலமான உப்புடனே கல்லுப்புங்கூட்டி
வாளப்பா பலமிரண்டு சமனாய்ச்சூத
　　மைந்தனே சட்டிக்குள்விட்டுப் பின்னை
சூளப்பா சீலைசெய்து கெந்தியூட்டிச்
　　சுளிவாக அறுசாம மெரித்திடாயே. (௩௩)

1, 2 சுவடியில் 'திறபாரயிரலோக' என்று எழுதப் பட்டிருக்கிறது. சுவடியில் ஒற்றுக்களுக்குப் புள்ளி கள் இல்லை.

2

எரித்திடுமுன் மேற்சட்டி வெத்திலைச்சாறூட்டி
யியல்பாக எடுத்தல்லோ குப்பிக்கெந்தி
தரித்திடுவாய் துரிசோடு வெள்ளைகூட்டி
சாதகமாய் வாலுகையி லடுப்பிலேத்தி
யெரித்திடுவாய் சாமமதுநாலு மைந்தா
எரிக்கையிலே தேங்காய்போல் கண்டத்தில்கட்டுந்
தரிக்கையிலே யுடைத்தெடுத்துப் படிகங்கண்டால்
தாயான சவ்வீரமுரமுங் கூட்டே. (௩௪)

கூட்டிடுவாய் வெடியுப்புச் சாரந்தானுங்
கூசாமல் நாலிலொன்று பாறையுப்புப்
பூட்டியல்லோ சேகரித்துக் குப்பிக்கெந்தி
யுத்தமனே யெரித்திடுநீ யாறுசாமம்
வாட்டியல்லோ வுடைத்தெடுத்து ரெங்குதொட்டி
வாகாகக் கூட்டியல்லோ குப்பிக்கெந்தி
நாட்டியல்லோ யெரித்திடுநீ யெட்டுசாமம்
நலமாக வுடைச்செடுக்க வீரமாச்சே. (௩௫)

ஆச்சப்பா இதின்போக்கு அனந்தம்போக்கு
அப்பனே சொல்லரிது அதிகவேதை
போச்சப்பா வாதமென்ற வேலைதாண்டி
பொருளாகப் பராபரையாளீன்ற நாதம்
வாச்சப்பா வங்கத்தில் பச்சையீந்தால்
மைந்தனே ரசிதமென்பார் வளமாய்ச்சொன்னேன்
நீச்சப்பா சூதமென்பார் வெள்ளூரமென்பார்
நிலையான உருக்குத்தொட்டி நினைவாய்ப்பாரே. (௩௬)

பாரப்பா வாதியென்றுலிதை யறிவான்மைந்தா
பரிசுகெட்ட மூடருக்குப் பண்பாகாது
சேரப்பா வீரமென்றசிறு துறையைச்சொன்னூர்ச்
சீரிவலைக்கரு வழித்தால் செகத்தில்தானும்
நேரப்பா அதினாலே துறையைப்பார்த்தால்
நிலையாது வேதையுட கட்டேபோகுந்
தேரப்பா இதினாலே ஒட்டிப்பாரு
திறமாக வனேகவித்தை நிறக்குமீதுதானே. (௩௭)

தானென்ற இந்தமுறை கொடுத்தாளாயி
தண்மையுட னிந்தவிதஞ் சொன்னாளாயி
யூனென்ற சட்டைமுனி ஆயிரத்திில்சொன்னார்
உத்தமனே அதுதானுமிதுக் கொவ்வாது
கோனென்ற *வாதத்துக்கருத்தானைந்து
குறியான கருவொன்று இதுவே மைந்தா
நானென்ற நாலுகருசொன்னேனைந்து
நலமாகப் பார்க்கையிலே தெரியுங்காணே. (௩அ)

தெரியாது என்றலைந்தால் தெரியுமோதான்
தேடியல்லோ ஆராய்ந்துபார்க்க வேணும்
அறியாத மூடருக்கு அறியப்போமோ
அன்னத்தைத் திரட்டிமெள்ள வாய்க்கீந்தாலும்
குறியாக முழுங்குதற்கு மாட்டார்மூடர்
குறிப்பாக இதுவல்லாலென்ன செய்வேன்
மரிவானவறி வொன்றுமில்லை யில்லை
மாட்டாத மூடருக்கு அறிவுதானே. (௩௯)

வாட்டியதோர் லிங்கத்தைச் செப்புகிறேன்கேள்
மைந்தனே வுரைக்கரிது மகத்தாம்வித்தை
கூட்டிடுவாய் வங்கமொன்று சூதம்ரெண்டு
கூசாமல் வங்கத்தின் குருத்தான்பாதி
ஊட்டிடுவாய்க் குருவுக்குப் பாதிசீனம்
உத்தமனே குப்பிக்குள்ளடைத்துக்கொண்டு
நாட்டிடுவாய் வாலுகையிலேத்திக் கொண்டு
நலமாக முச்சாம மெரித்திடாயே. (௪0)

நலமான குப்பியுட கழுத்தில்கட்டும்
நன்மையுடனுடைத்தெடுக்க லிங்கமாச்சு
கலமான குப்பியிலே பலவிதந்தான்
கணக்கறிந்து கைமுறையாய்ப் பண்ணுமைந்தா

---

* 'வத்ததுக்' என்று காணப்படுகிறது.

நிலமான கைமுறையை விட்டுப்போட்டுத்
திறமில்லை சாத்திரத்தைப் பொய்யென்பார்கள்
செலமான செயனீரை அறியாமூடர்
செடமொன்று மறியாமல் தயங்கினூரே. (௪௧)

தயங்கியதோர்த் துறைக்கெல்லாம் குருச்சொல்லறிந்தேன்
தாயாரும் பக்கத்திலிருந்து சொன்னாள்
மயங்கியதோர் மயக்கமெல்லாம் வெளியாய்ப்போச்சு
மைந்தனே வெளிகண்டு மயங்காவண்ணம்
செயங்கண்டு சொன்னேனடா பார்க்கும்பேர்க்கு
தெரியாமல் உளறியல்லோ கெட்டுப்போனூர்
மயங்கண்டு பொருள்கண்டு எல்லாங்கண்டு
பாராமற் போனதினூல் பாழதாமே. (௪௨)

பாழான முப்பாழுந் தாண்டிக்கொண்டு
பாலகனே யீரெட்டுக் கலையுந்தாண்டி
கோளான ரவியிடவீடுந் தாண்டி
கொள்கியதோர் வன்னியுட வீட்டுக்கப்பால்
ஆளான ஆயிரத்தெட்டிதழில் நிற்கும்
அருளான குருபதத்தை யணைத்துக்கொண்டு
கீழான அமிர்தத்தைப் பானம்பண்ணிக்
கேசரிதானிவர்களுக்கு வாதந்தானே. (௪௩)

வாதமென்றுலிதின்பொருளை யறியாமூடர்
மயங்குகின்ற உன்மனையை வாதுசெய்து
போதமென்றதுன்வசத்திலாக்கிக்கொண்டு
புகலான துறைக்கெல்லாங் கொண்டால்வேதை
வேதையென்றால் வெகுகோடி வேதையாகும்
மேலான அமிர்தத்தைப் பானம்பூட்டு
நாதமென்ற கீதங்கள் பத்துங்கேட்கும்
நலமான வழியோடே நாடிப்போமே. (௪௪)

நாடினதோர் கெவுனமென்ற குளிகையப்பா
நலஞ்சிறந்த காயத்தைச் சித்திபண்ணும்
ஊட்டினதோரிதுக்கெல்லாமாயிரந்தான்மாத்து
உத்தமனே தங்கமது வேணுமென்று

கூட்டியதோர் சிவயோகத்துட் பட்டோர்க்குக்
குணமான வாமத்தில் பண்பட்டோர்க்குந்
தேடியெங்கு மலையாமல் சிவந்தானன்று
தெளிவாக ஏழுலெட்சங் கிரந்தமாமே. (சரு)

தெளிவாகத் தேவிக்கு உபதேசித்தார்
செப்பியவள் ஆயிரமாய் நந்திக்கீந்தாள்
தெளிவாக நந்தியுமே மூலர்க்கீந்தார்
சேர்ந்ததொரு மூலருமோ போகர்க்கீந்தார்
தெளிவாகப் போகருமே எனக்குமீந்தார்
சிறந்தநான் பூலோகத் தமிழினாலே
தெளிவாக யின்னூலைப் பார்க்கவேண்டிச்
செப்பினேன் திறமாகச் செப்பினேனே. (சசு)

செப்பினேன் குருடனுக்குத் தெரியும்வண்ணந்
தெரியாமல் மயங்கிநின்றால் வாதமாமோ
தப்பியதோர் வண்ணானை வசமேசெய்து
தாக்கினதே யானுக்கால் வாதமாச்சு
கொப்புகின்ற சிதம்பரத்தால் வடுகன்றன்னால்
கூறியதோர் சுண்ணத்தால் வண்ணானாச்சு
துப்புறவே வெளிவிட்டு சொன்னேன்பாரு
துலங்கியதோர் சிப்பிக்குள் வடுகனாச்சே. (சஎ)

## மிருதாறுசிங்கி.

ஆச்சப்பா குருவெல்லாமிதிலே சொன்னேன்
அறிவான வாதியென்றால் அறிவானித்தை
போச்சமதி கெட்டபாவிக் கானால்
புதல்வனே மற்றவர்க்குப் புகழ்ந்துகாணும்
பூச்சென்ற பூச்செல்லாம் வெளியாய்ப்போச்சு
புகழான சரக்கெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
நீச்சப்பா மிருதார்சிங்கி வைப்பை
நேராகச் சொல்லுகிறேன் நிலையைக்கேளே. (சஅ)

*நிலையாகக் கருநாகம் பலந்தான்பத்து
நேரான வெடியுப்பு ரெண்டுசினம்
நிலையான பலமொன்று காரங்காலும்
நிசமானக் குகைதனிலே வைத்துமூடி
நிலையானக் குகையடியில் தாரும்விட்டு
நினவாக அடியிலே குகையும்வைத்து
நிலையான நாகமென்ற மேலும்நத்தி
நிற்கையிலே அடியிலே யுருகிப்பாயும்
நிலையான பதங்கண்டு யெடுக்கும்போது
நிலைத்ததே மிறுதாறுசிங்கு தானே. (உகூ)

சிங்கியென்றால் சரக்குகளைச் சிங்கியாட்டும்
சேர்வில்லாச் சரக்குகளைச் சேர்த்துக்கொள்ளு
மங்கத்தாலடங்கிப்போமாய்ந்துபார்க்கில்
அரிதரிது சொல்லவென்று லாத்தாளாலும்
பொங்கவென்றுலிதன் போக்கு அந்தம்போக்கு
புதல்வனே வங்கமென்பார் நிமிளையென்பார்
யிங்கிதமாய்க் கரிமுகவன் றுதமப்பா
யேகாந்தப் பிரிதிவியாஞ் சரக்குத்தானே. (ரும)

ஏகாந்தப் பொருளான யேகந்தன்னை
யிதங்கெட்ட மாந்தருக்குத் தெரியப்போமோ
யேகாந்த மறியாத மூடருக்கு
யெத்தனைதான் சுட்டாலும் வாதமாமோ
யேகாந்தந்தனை யறிந்தால் சுட்டபின்பா
ரெய்துமே நினைக்கையிலே யெல்லாம்வித்தை
யேகாந்தக் கருவறிந்தாலவனேவாதி
இதையறிந்து மாட்டுதற்கு எளிதாம்வாறே. (ருக)

வாறான யோகமென்றால் சொல்வேன்கேளு
வன்னியென்றால் பானுதலோடாயிறுதமாகும்
கூறான நாகத்தின் சுன்னந்தன்னில்
கூடுமே வாதமென்ற மார்க்கந்தன்னில்

---

* இச்செய்யுளில் ஒருஅடி அதிகமாயிருப்பதைக் கவனிக்க.

நீருக வுருக்கினத்துக் கிதுவேதென்னில்
நிலைத்துப்பாருன்னிடத்தில் நிசமாய்ச்சொன்னேன்
தேருணபூரமென்ற வைப்பின் மார்க்கஞ்
செப்பினேன் திறமாகச் செப்பினேனே. (ருஉ)

## பச்சைக் கற்பூரம்.

திறமான ரவியினுட நாதந்தானுஞ்
செப்பினேன் பலமொன்று சீனங்கால்தான்
உறவான வாய்விளகு ஏலம்சீந்தில்
வுத்தமனே விளகோடுங் காரங்கூட்டி
அறமான புழுகோடு கோரோசனைதான்
அப்பனே கஸ்தூரி மணியுங்கூட்டி
நிறமான சந்தனத்தின் தைலந்தானும்
நிகரதாய்க் கொல்லியுட சாறுகூட்டே. (ருங)

கூட்டிடுவாய்க் குமரியுட மூலாதாரம்
குழப்பியல்லோ பீங்கானிலுள்ளே கொண்டு
நாட்டிடுவாய்ச் சட்டிக்குள் சீலைசெய்து
நாட்டுமுன்பே ஓலையைத்தான் சுருள்போல்பண்ணிப்
பூட்டியல்லோ யெரித்திடுநீ சாமந்தன்னில்
புதல்வனே யெரியல்லோ மடலாய்நிற்கும்
வாட்டியதை யெடுத்திடுவாய் பூரமாகும்
மைந்தனே கைமுறையாய் மகிழ்ந்துபண்ணே. (ருச)

பண்ணப்பா யிதையல்லோ கோசமென்பார்
பரிவான பூரமென்பார் பீசமென்பார்
ஒண்ணப்பா ஆயியுடநாதந் தானும்
முரைக்கரிது யுரைக்கரிது யுலகில்தானும்
நண்ணப்பா அப்புவென்ற சரக்கேயாகும்
நாதாக்கள் உள்கருவாம் நாடிச்சொல்வார்
ஊணப்பா இதனாலே அண்டாண்டந்தாண்டும்
ஓகோகோ சொல்லரிது உத்துப்பாரே. (ருரு)

உத்துப் பார்கையிலே ஓடாதோடும்
உத்தமனே வாதத்துக் கன்னக்கோலாம்
உத்துத்துப் பாராமல்முறை பொய்யாச்சு
ஓகோகோ பெண்ணுடைய ஆசைவிட்டு
உத்துத்துப் பார்க்கையிலே யெல்லாஞ்சித்தி
வுலகத்தில் பாராதால் சித்தியில்லை
உத்துத்துப் பாரப்பாநன்றாய்ச் சொன்னேன்
உன்மனதை மெழுகாக உறத்துப்பாரே. (ருசு)

## சாம்பிராணி வைப்பு.

உறைப்பாக வித்தையொன்று சொல்லுறேன்கேள்
உத்துப்பார் கண்கெட்ட குருடருக்குந்தான்
மறைப்பாகச் சொல்லவில்லை திறந்துசொல்வேன்
மதிகெட்ட மூடருக்கு மகிழ்ந்துசொல்வேன்
மறைப்பான குங்கிலியம் பலந்தான்பத்து
மாய்கையுள்ள அரக்கதுவும் பாதியாகுங்
கரைப்பாகச் சொல்லுகிறேன் கருவாய்ப்பட்டை
கண்டுகொள்ளுமரக்குக்குப் பாதிகாணே. (ருஎ)

காணப்பா யிதுவல்லோ யிடித்துநன்றாய்
கைமுறையாய்ப் பாண்டத்தில் நெய்யூற்றி
பூணப்பா யெரித்தல்லோ உருகும்போது
புதல்வனே பதங்கண்டு வாங்கிக்கொண்டு
நாணப்பா கோணிகையில் கட்டிக்கொண்டால்
நலமான சாம்பிராணி வாசம்வீசும்
தூணப்பா துரும்பாகுந் துரும்புந்தூணாந்
சொல்பெரிய ஆயியுடவித்தை தானே. (ருஅ)

வித்தையிலே வுத்தமமா மிந்தவித்தை
உத்துப்பார் லிங்கமென்பார் கிராவமென்பார்
சுத்தயிலே சரக்குமறுபத்துநாலுக்குஞ்
சுறேன சுத்திக்குமிதுவே யாதி

மத்தயிலே தேவியுடநாத மாகும்
பாலறியார் னெய்யறியார் பண்பில்லாவாதி
நத்தயிலே யிதையறிந்து துரையைப்பார்த்தால்
நாகத்தின் முன்னெதிர்த்த தவளையாமே. (ருகூ)

நாகமென்று லதின்திறத்தை நன்றுய்க்கேளு
நாதாக்கள் சொல்லார்கள் நன்றுய்ச்சொல்வேன்
தேகமென்றல் தேகமல்லோ வானத்தின்கூறு
சேலானவுயிருமல்லோ சூதமாச்சு
போகமென்றல் உயிர்நாக மிரண்டுமொன்று
புதல்வனே வெடியுப்பு நாலிலொன்று
வேகமென்ற சூதந்தான் எட்டிலொன்று
மேலான மஞ்சளென்ற கருவுங்கூட்டே. (சூ)

கருவான உமிநீரு பூனகப்புத்து
கண்டுபார்குன்றிமணி கல்லுப்புந் தானும்
முருவான வெண்கருவா லாட்டிக்கொண்டு
உத்தமனே குதையாகப் பண்ணிக்கொண்டு
தருவான துருசியல்லோ மேலேபூசிச்
சாதகமாய்க் கீழ்மேலாய் வெடியுப்பும்போட்டுத்
துருவான உலையில்வைத்து ஊதும்போது
துலங்கியே உருகியல்லோ தெளியும்பாரே. (சூக)

தெளிவாகப் பதங்கண்டு சாய்த்தாயானல்
செயலான கண்விழித்து வயிரமின்னும்
ஒழிவான நாகமப்பா துத்தனுகம்
உத்தமனே வுரைக்கரிது வேதைகோடி
கனிவான திதையறியார் குருட்டுவாதி
கைக்கொத்த கன்னக்கோல் வாதத்துக்கு
சுழிவான வித்தையப்பா பிருமனுதம்
சொல்லரிது சொல்லரிது சூட்சந்தானே. (சூஉ)

சொல்லரிது குகையுடைய அடக்கந்தானுஞ்
சொல்லார்கள் நாதாக்கள் விரித்துத்தானே
வெல்லரிது வெல்லரிது வேதைகோடி
வேதாந்த நிர்மலமுங்களருவார்காண்

வல்லரிது வல்லரிது வங்கந்தானும்
மைந்தனே சிவருப்புச் சத்தியாகும்
இல்லரிது தில்லரிது ரெண்டுங்கூட்டி
நின்றத்தில் மடையனென்று நிகழ்த்திட்டாயே.(சுங)

நிகழ்ந்திட்ட மடையனென்று சொல்லக்கேளு
நிலையில்லாச் சரக்கையெல்லா மடக்கிக்கொல்லுங்
கிழந்திட்ட வாதிக்கியிதுவே மூலம்
மைந்தனே ஆராய்ந்து பார்க்கவேணும்
சிகந்திட்ட மாலரனையடக்கி நிற்பான்
செகத்தையெல்லாம் பொன்விளைக் குஞ்சிகரகூடம்
ரகிழ்ந்திட்ட ஆச்சரியம் வித்தையப்பா
அரிதரிது சொல்லுகிறேன் அரிதானவாறே. (சுச)

வாறான வங்கமது பலந்தான்பத்து
மைந்தனே வெடியுப்பு வரிசையாகக்
கூறான மேனியிலைச் சாத்தில்தானுங்
குமுறவே காய்ச்சியல்லோ வாங்கிக்கொண்டு
தேறான பலமொன்று வுய்யக்கொண்டாஞ்
சாற்றில்லோ போட்டுக்கொண்டு
வீறான வங்கத்தை நறுக்கிப்போட்டு
விரவியல்லோ கவசத்தி லிட்டுமூடே. (சுரு)

மூடியல்லோ மாலயன் மகனுக்கிந்தால்
முசியாமல் மண்டலத்தில் வாங்கிக்கொண்டு
நாடியல்லோ முன்சொன்ன குகைக்குள்மைந்தா
நலமான துருசியிட்டுப் போட்டுஊதி
நீடியல்லோ பார்த்தாக்கால் தெளிந்துகாணும்
நிலையான துய்யவங்கம் ரசிதங்கோடி
கூடியெல்லாஞ் சாய்த்திடுநீ பாளமாகக்
கூறரிய வங்கமது கூறினேனே. (சுசு)

வங்கமென்ற வங்கமெல்லாம் ரசிதமப்பா
வாகான குருவாச்சு அறியமாட்டார்
சிங்கமென்ற வண்ணனைச் சேர்த்தாயானால்
செகமெல்லாம் வெள்ளியென்ற சிகரமாகும்

வங்கமென்ற சரக்குகளாகச் செய்து
அதட்டியல்லோ பிடித்தடியா யடக்கிக்கொள்ளு
திங்களென்ற மதிஞதமென்பார் சித்தர்
சிறுவானை யிணங்கிஞட சிகப்பைக்கேளே. (சுஎ)

## பெருங்காயவைப்பு.

கேளப்பா கூவிளத்தின் சதைதானெட்டு
கெடியான வுளுந்திஞட மாவேயாறு
நாளப்பா உளுவைவிரை பலந்தாஞறு
நலமான வெள்ளுள்ளி ரெண்டாய்க்காணும்
நீளப்பாகுக்கி லொன்று சுக்குரெண்டு
நிலையான பன்வெல்லங் காயமிரண்டு
ஆளப்பா அத்தியுட பாலைவிட்டு
அப்பனே யிடித்திடவே மெழுகதாச்சே. (சுஅ)

ஆச்சப்பா கடுகிஞடத் தயிலம்விட்டு
ஆட்டிஞட தோலதிலே கட்டிக்கொண்டு
பாச்சப்பா நெல்க்குழிக்குள் மண்டலந்தான்
வைப்பாய் பாலகனே பெருங்காயவாடைவீசும்
நீச்சப்பா நிலையுமில்லை கறையுமில்லை
நிலையான சட்டைமுனி நிகண்டிற்சொல்வார்
போர்ச்சப்பா பீடையெல்லாம் வன்னிக்குமுன்ஞல்
புகழான பெருந்தீப்போல் வாழுதாமே. (சுகூ)

## அபினி வைப்பு.

ஆமப்பா யின்னமொன்று சொல்லக்கேளு
அப்பனே சமாதிக்கி ஆதிபீடம்
நாமப்பா வறுமையைத்தான் தூற்றுவிக்கும்
நலமான அவுனியுட முறையைக்கேளு

ஓமப்பா சொல்லரிது மகத்தாம்வித்தை
உத்தமனே உரைக்கரிது ஊனிப்பாரு
தாமப்பாநாதாக்கள் திறந்து சொல்லார்
தாயன்றுஎனக் குரைத்தாள் தயவாய்த்தானே (எம)

தானென்ற எட்டிவிரை பலந்தான்பத்து
தாங்கியல்லோ ரவியிலிட்டு நீரேபோக்கி
பூனென்ற வித்தையெல்லாம் நறுக்கிக்கொண்டு
யுத்தமனே யிடித்துநன்றாய்ப் பொடியதாக்கி
நானென்ற யெருக்கம்பூப் பலந்தான்பத்து
நலமான பாண்டத்தில் நீரேவிட்டு
கோனென்ற பாண்டத்தை யடுப்பிலேத்தி
குருகவே காய்ந்தபின்பு வாங்கிக்கொள்ளே. (எக)

வாங்கியல்லோ வேம்பினுட பிசின்தானுலு
மைந்தனே கசகசாவு மிரண்டுகூட்டி
போங்கியல்லோ பழவெல்ல மூமத்தின்சாறு
உத்தமனே விட்டுநன்றா யாட்டிக்கொண்டு
தாக்கியல்லோ நல்லெண்ணை வலைத்துங்கூட்டி
தன்மையுடன் கிண்டியல்லோ பதத்தில்வாங்கு
பூங்குழலா ளுரைத்தவித்தை யபினியப்பா
புண்ணியமே செய்தவற்குக் கிட்டும்பாரே. (எஉ)

புண்ணியத்தால் வரவேணும் வித்தையெல்லாம்
புகழ்ந்தல்லோ யான்சொன்னேன் வெட்டவெளிதன்
தண்ணியத்தானதை நன்றாய் அடையாய்த்தட்டி [னில்
தாக்கியல்லோ மண்டலந்தான் பதன்பண்ணு
புண்ணியத்தா லெடுத்துப்பார் மாம்பழம்போல்வீசு
மூத்தமனே யுட்கொள்ள மவுனமாச்சு
கண்ணியத்தால் சாரத்தை நிமிஷந்தன்னில்
கடுகியல்லோ கொல்லுமது கலந்துபாரே. (எங)

பாரப்பா விவ்வண்ணம் வெட்டவெளிதன்னில்
பதிவாகக் கருவிரித்துச் சொன்னாரில்லை
நேரப்பா சகந்தனிலே அவரவர்கள்
சித்தர்நேராகப் பாடினார் சாஸ்திரங்கள்கோடி

காரப்பா கைமுறையும் பூட்டான்கருவுங்
கணக்கறியா வன்மையதாய்க் கலங்கித்தானுஞ்
சேரப்பாஇல்லாமல் கெட்டவர்கள் கோடி
சிறப்பாகத் தெளியவல்லோ பாடினேனே. (எச)

பாடினேன் குருடனுக்குத் தெரியும்வண்ணம்
பலபலவாய் சாஸ்திரத்தில் பார்த்தாயானால்
தேடினதோர் கொடிக்காலிற் சிக்கினாற்போல்
திறந்தல்லோ தெரியுமடா வெட்டவெளிதன்னில்
ஆடலா மறுபத்துநாலு வித்தை
அறியாத மூடருக்கு அறியச்சொன்னேன்
தேடியல்லோ திரியாமலித்தைப் பார்த்துச்
செய்வதற்கு கைகண்ட சித்தியாமே. (எரு)

## சுத்தி வகை மூன்று.

சித்தியென்று லெளிதாகச் சித்தியாமோ
சித்தருக்குச் செய்வகையை செய்யக்கேளு
முத்தியதோர் மூலிகையி லஞ்சுசுத்தி
யுருவான சரக்கிலே அஞ்சுசுத்தி
நித்தியதோ ருன்னிடத்தி லஞ்சுசுத்தி
நேரான யிதின்விபரம் நேர்ந்துகேளே. (எசு)

கேளப்பா மிருகத்தில் பன்றியுடதைலம்
கெடியான கேசரியின் நீரேயாகும்
நீளப்பா முசலினுட மாங்கிழமேமைந்தா
நேரான அசத்தினுட எலும்பேயாகும்
சூளப்பா வெருகி(தி)னுடசுக்கிலமே மைந்தா
சூட்சமடா துறைக்கெல்லா மிதுவேவேணும்
வாளப்பா வூர்வனத்தில் கேளுமப்பா
மைந்தனே வுரைக்கரிது மகத்தாங்காணே. (எஎ)

காணப்பா அச்சடக்கியோடே வேணும்
　　கைகண்டசிப்பியுட மாங்கிழமே வேணும்
கோணப்பா நண்டினுடபாலே வேணுந்
　　தொகுப்பாகச் சங்கினுட சுன்னம்வேணும்
நாணப்பா மூலிகையில் ஆவினுடநெய்யும்வேணும்
　　நலங்கவதில் கூடுந்தவளை நெய்யும்வேணும்
பூணப்பா மூலிகையில் சொல்லக்கேளு
　　புதல்வனே யுரைக்கரிது புகல்வோந்தானே. (எஅ)

தானென்ற வீழியுடன் ஆதளையின்பாலுந்
　　தணித்துநின்றஅடி யொட்டிக் கள்ளியாகு
வேனென்ற ஊமத்து அஞ்சுமாச்சு
　　விளங்கியதோர் சரக்கிடை விபரங்கேளு
ஊனென்ற வழலையொன்று வக்கமொன்று
　　உத்தமனே உப்பொன்று சூதமொன்று
நானென்ற பாழான மஞ்சுமாச்சு
　　நலமான உன்னிடத்தில் நாதங்கேளே. (எகூ)

நாதமொன்று அமுரியொன்று வாய்நீரொன்று
　　நலமான சுக்கிலமுஞ்சுரோணிதத்தோடு
கிதமென்ற முலைப்பாலோ டைந்துஞ்சொன்னேன்
　　கெடியான திவ்வகைதான் பூதமாச்சு
நீதமென்ற தங்கமப்பா சீவனாச்சு
　　நிலையாகத் தாக்கிறது சடந்தானாச்சு
வாதமென்ற வாதத்தின் கருவையெல்லாம்
　　வழிப்பாடாய்த் திறந்தல்லோ யான்சொன்னேனே.
(அ0)

யான்சொன்ன நூலெல்லா மிந்தநூலை
　　அறிவாக ஆறுதிங்கள் வருடமொன்று
நான்சொன்ன படியாகச் சோதித்துக்கொண்டு
　　நலமாக அஞ்சுவகை திட்சைவைத்துத்
தென்கமல முகத்தாளை வந்தனமேசெய்து
　　செகத்தைவென்ற ஞானியென்று வாராமல்நின்று
தான்சொன்ன படியாகச் சொன்னேந்தேகந்
　　தடிவெடிப்போகவென்று சபித்திட்டேனே. (அக)

சபித்திட்டேன் ஆயியுடபாதந் தன்னை
சற்குருவாம் போகருடபாதந் தன்னை
குயித்திட்ட யுத்தமாம்பிள்ளை கண்டால்
கூட்டிவந்து முதுகுதட்டி வேடம்போட்டு
பவித்திட்ட மாம்போடு யோகவேட்டிப்
பண்பாகப் படிகலிங்கம் படிகமாலை
தவித்திட்ட இவை யெல்லாம் நன்றாயீந்து
நலமாக யிந்நூலை நவிந்திடாயே. (அ௨)

நவில்கின்றேன் யாவர்க்குமிவ் வண்ணந்தான்
நாதாக்கள் கண்டாக்கால் விட்டுப்போகார்
யொள்கியதோர் முன்சொன்ன சுத்தியெல்லாம்
உத்தமனே துறைக்கெல்லாம் வேணும்வேணும்
புல்கியதோர் சேர்வைகண்டு கொள்கைகண்டு
புண்ணியனே சேர்புவன ஞானப்பூட்டு
வல்கியதோர் துறைக்கெல்லாம் வண்ணஞானதி
வகுத்துரைக்க யான்மாட்டேன்வகுத்திட்டேனே.(அ௩)

வகுத்திட்ட துருசியாலே சத்தேகேளு
மைந்தனே நிமளையது பலந்தானன்று
செகத்திட்ட பழச்சாற்றால் ஆட்டிக்கொண்டு
செயலான பீங்கானில் பழச்சாறுவிட்டு
நிகழ்த்திடவே யேழுநாள் ஆவிமுன்காட்டு
நேராகச் சாறுவத்தி யூத்திக்கொள்ளும்
பருத்திட்ட யேழாநாள் பாலாடைபோல்கட்டும்
பாலகனே யுலர்த்தியல்லோ பண்பாய்வாங்கே. (அச)

வாங்கியபின் புலிநாதமாவி ஞதம்
வாகான சீனமொடு வீரங்கார
மோங்கியதோர் சட்டிக்குள் சீலைசெய்து
உத்தமனே சாமமது எரிக்கும்போது
தாயல்லோ யெனையழைத்துச் சொன்னாளத்தாள்
புதைத்தே நானித்தனை நாள்புகலக்கேளு. (அரு)

புகழான தங்கத்தைரசிதத்தைச் செம்பை
புணர்த்தியல்லோ ரவிகாட்டில் நீறிப்போகும்
நிகழ்வான கடுஞ்சுறுக்குப் போக்கோகோடி
விண்ணடங்கா மண்ணடங்கா வேதைகோடி
அகல்வான துருசியிலே வீரம்பூரம்
அப்பனே புழுகிட்டு மத்திச்சம்மி
நிகழ்வான ரவிகாட்டில் நீறிப்போகும்
நிலைத்துதப்பா வாதமென்ற வேலைதானே. (அசு)

வேலையென்ருல் வெகுவேலை வாதத்துக்கு
வேலைவிட்டு வெகுவாக வேதைசொன்னேன்
வேலையென்ருல் சவுக்காரந் தன்னிலப்பி
விரையவே ரவிகாட்டு வெண்ணெய்போகும்
வேலையென்ற சாரத்தில்பூசி யாட்டில்
வெகுமூட னூதிடவே சுன்னமாகும்
வேலையென்ற கெந்தியைத்தான் பூசியாட்டில்
விரைத்தூதச் சுன்னமடா விரைந்துபாரே. (அஎ)

விரைந்துபார் கெந்தகத்தை ரசத்தில்போட
விரையவே சூதந்தான் மணியதாச்சு
விரைந்துபார் கல்லுப்பின் மேலேபூசி
வீந்ததொரு ஆரயிலைப் புடந்தான்பத்து
சரைந்துபார் போடயிலே மணியதாச்சு
சாதகமாய் சவாதுடனே காரமிட்டு
திரைந்துபார் மணிபோலே நின்றேயாடும்
செகமுகதலாய் நடனத்திலது தான்காணும்
உரைந்துதப்பா சமாதிக்கு ஆதிமூலம்
உத்தமனே அமுறதத்தை யூட்டும்பாரே. (அஅ)

ஊட்டுகிற மணியைத்தான் தங்கமூட்டி
உத்தமனே செந்தூரம் பண்ணிணுக்கால்
நாட்டுகின்ற நவலோகந் தன்னிலீந்தால்
நடுங்கவே பதிறைறு மாத்துக்காணும்

கூட்டேனே நூறுதரம் ஊதிஞக்கால்
    கொள்கியதோர் கெவனமென்ற குளிகையாச்சு
வீட்டுகிற அரமருகனுதமப்பா
    இத்தனையுஞ் செயலாச்சு எளிதாம்வாறே. (அசு)

வாறுன நிமளையைத்தான் வயிரவற்குப்பூசி
    மைந்தனே உலத்தியல்லோ ஊதிப்போட்டால்
தேறுன சுண்ணமப்பா கடுஞ்சுருக்குத்
    தேவியுட சுண்ணமோடு துருசிச்சுன்னம்
கூறுன வங்கத்தின் சுன்னத்தோடு
    கூறரிய வழலையோடு சுன்னந்தானும்
நீறுன சீனத்தின் சுன்னத்தோடு
    நிலைத்துநின்ற கல்லுப்புச் சுன்னந்தாக்கே. (கூ0)

தாக்கியல்லோ இவையெல்லாம் பலந்தானென்று
    சாதகமாய்ச் சூதமது பலந்தானஞ்சு
தேக்கியதோர் கெந்தியப்பா அதனில்பாதி
    சேந்துநின்ற பூரமது கெந்திக்கும்பாதி
ஆக்கியதோர் வீரமது பூரத்தில்ப்பாதி
    அப்பனே தங்கமது வீரத்தில்பாதி
யூக்கியதோர் காரமது அதனில்பாதி
    யுத்தமனே சவ்வாது பாதியாமே. (கூக)

ஆமப்பாயிவை யெல்லாம் பொன்மதத்திஞேர்நாள்
    அப்பனே சிப்பியுட நீரிலோர்நாள்
சேமப்பா அரைத்துநன்று யுலரவைத்துச்
    செயலாகக் குப்பியிலே யூட்டிக்கொண்டு
நாமப்பா குப்பியிலே சீலைசெய்து
    நலமான அறுசாம மெரிக்கும்போது
வோமப்பா தேங்காய்போல் கழுத்தில்கட்டு
    முத்தமனே யுடைச்செடுக்கக் களங்கமாமே, (கூ௨)

களங்கமென்ற வராகத்தின் தைலம்வாங்கிக்
    கண்டுகொள்ளு வாங்கயிலே தாரஞ்சேரு
புளங்கமெனத் தைலத்தால் களங்கத்திலாட்டி
    புதல்வனே குப்பிக்குள் வைத்துக்கொண்டு

தளங்கமென்ற சாமமது ஞலிற்ருனுஞ்
சாதகமா யெரியல்லோ கழுத்தில்கட்டு
மளங்கமறு முடைத்தெடுக்கச் செந்தூரமாகும்
உரைக்கரிது உரைக்கரிது செந்தூரந்தானே. (கூஙு)

அரிதான செந்தூர மாதுளம்பூச்சாற்றில்
அப்பனே திலதமிட அரிதரிதுசொன்னேன்
அரிதான பராபரையும் பராபரனும்வந்து
அரகரா உனக்கேவலடுத்தே கேட்பார்
அரிதான மற்றதெல்லாம் பொருட்டோசொல்லு
அழைக்குமுன்னே கைகட்டி முன்னேநிற்பார்
அரிதான வசியமப்பா என்னசொல்வேன்
அரிதரிது போகருட ஆட்டந்தானே. (கூச)

ஆட்டமென்ரு விதுவல்லோ ஆட்டமப்பா
அப்பனே மஞ்சாடி அஞ்ஞாத்துக்கொண்டு
வாட்டமில்லா வங்கத்தி லீந்தாயானல்
மைந்தனே ஞூற்றெட்டு மாற்றுக்காணும்
நாட்டமென்ற நாட்டமெல்லா மிதிலேயாடும்
நலமான நாட்டம்போல் நான்மறைக்குமெட்டாத
தேட்டமென்ற ஆயியுட பாதந்தன்னில்
செலுத்தியல்லோ உன்மனதைச் செலுத்துவாரே.
(கூரு)

செலுத்துவாயுன் மனதையீசுவரிக்கு மைந்தா
தேட்டரியா மலராலே பூசைசெய்து
செலுத்துவா யறுசுவையும் மூலத்துக்கு
செகத்தைவென்ற ஞானத்தைப் பரமேவாங்குஞ்
செலுத்துவா யுன்னுடைய ஊழ்வினைகளெல்லாம்
தேடரியாக் கரிமுகற்குப் பூசைசெய்து
செலுத்துமனம் வயிரம்போல் பிசகாமல்நின்று
தேடியல்லோ குருபதத்தைச் சேருவாயே. (கூசு)

தெருவான முன்சொன்ன வைப்புக்கெல்லாந்
தேடரிய ஆத்தாளைப் பணியவேணும்
குருவான நிர்மலத்தைப் பணியவேணுங்
கொள்கியதோர் சத்தியத்தை நிறுத்தவேணுஞ்

செகத்திலே விட்டொளிந்து ஞானம்வேணும்
பருவான அமுர்தத்தை யுண்ணவேணும்
பாலகனே குருத்தொட்டு பதத்தைபாவிக்கொள்ளே. (கள)

பரவான முறைக்கெல்லாம் எந்தநூலைப்
பாலகனே குருத்தொட்டுக் காட்டவேணும்
குருவான குருவில்லான் தெரியமாட்டான்
கூப்பிட்டால் வாராது குருவைத்தானுந்
திறமாகத் தேடியல்லோ சற்குருவைப்பார்த்து
திறமுடனே பதம்பணிந்து போற்றவேணுஞ்
சார்வான சற்குருத்தான் கிட்டாவிட்டால்
தன்மையுடனு பாயத்தைச் சாத்தக்கேளே. (கஅ)

சாற்றுகிறேன் புருமய்யத் தானந்தன்னில்
சற்குருவாம் நிர்மலத்தைப் போற்றிசெய்து
சாற்றுகிறேன் கீழ்வரையிலாலை யைத்தானோக்கிச்
சலியாமல் பூசைபண்ணித் தியானம்பண்ணு
சாற்றுகிறேன் பண்ணுதற்குக் கேளுமைந்தா
சாதகமாய் மூன்றெழுத்தில் சிகாரங்கூட்டி
சாற்றுகிறே னிர்மலத்தைத் தியானம்பண்ணு
சலியாமலாய யுட்சந்தான் கேளே. (கக)

சந்தான மவ்வோடு சிகாரந்தானுஞ்
சமரசமாய் வகாரமொடு மூன்றின்மாறி
தந்தாரை யிருநாமமொக்கக் கூட்டி
சாதகமாய் மவுனமதைத் தியானம்பண்ணு
வந்தானம் பூசையைத்தான் நன்றாய்ப்பண்ணு
மைந்தா பண்ணையிலே நிர்த்தஞ்செய்வாள்
தொந்தான சிவசத்திதீட்சை சொன்னேன்
சூட்சமாம் நாதாக்கள் சொல்லார்பாரே. (உ)

---

# அநுபந்தம்.

---

ஈச்சமுனி நாயனர் கடைக்காண்டம் என்றுரைத்த
சரஸ்வதிமஹால் 31 ஆ. நெம்பர் சுவடியிலிருந்து
கொங்கணர் சரக்குவைப்பில்கண்ட
சரக்குகளைப்பற்றிய முறைகள் மாத்திரம்
இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

---

## பொது.

உப்பான கல்லு உவரான பூரணம்
அப்பான விந்து வாதி விராமயஞ்
செப்பாத போதஞ் சிவனுத விந்து
முப்பாம் வழலை முடிதனிற் காணுமே (௮௧)

காணு மேவழலை கயலாழ பூரணங்
தோணுமே வந்தங் தொடுகுறி போலவே
வீணல்ல வந்த மெய்யான வுப்புவை
யாணுவை நீக்கி அந்நுப்பு வேண்டுமே (௮௨)

வேண்டு மேநாத மெய்யான விந்துவுந்
தூண்டு கோலான துடியான கல்லுப்பு
வாண்டு கொள் மூன்றுமரைத்திடுவிந்துநீர்
வேண்டி யரைத்து மெய்யாக வட்டிடே (௮௩)

வட்டது போலவே வடிவாயுருச் செய்து
இட்டமா யாவியில் செம்மையாய் காய்ந்தபின்
வட்டம் தோட்டில் வைத்திடுபத்தெரு
இட்டமாய் நீரில் சிவகுரு வாமே (௮௫)

குருவான முப்புக்கூட்டி முடித்திடத்
திருவான மாறு செய்யலது வுண்டா
மூருவான வருவது வோடி வொடுங்கிடுங்
தருவான வைப்புச் சரக்குச் சொல்வேனே (அசு)

## சீனவைப்பு.

சொல்லுவேன் சீனக் கொடுகுறிபோல
நல்லுவருப்புங் கல்லுப்பு ரெண்டு
மல்லும் பழச்சாரங் தயிர் விட்டுப்
பல்லுறவாகப் பாண்டத்தில் மூடே (அஎ)

மூடியே சாணி முழுதுமே பூசி
காடியே ஆரின் பதிதனிற் றுக்கிக்
கூடியே மண்டலங் குறிப்பாக வைத்துத்
தேடி யெடுக்கச் சீனமுமாச்சே (அஅ)

## *ஆலத்திப்பூரம்.

ஆச்சடா பூரமதினுட வைப்பு
நீச்சடா சொல்வேன் நினைவுடன் கேளு
பேச்சடா சீனம் வெடியுப்புடன் ரெண்டும்
பாச்சடா மூலம் பதிவுடன் சேரே (அகூ)

சே(ர்)த்தே பிடித்துச் சிதம்பரம் பூட்டிப்
பா(ர்)த்தே பிடித்துப் பாண்டத்திட்டுக்
கா(ர்)த்தே மண்டலங் கருவாகப் பூமியி
லாத்தி நீயெடுக்கவாலத்தி யாமே (கூ0)

## வெங்கார வைப்பு.

ஆமே நல்லுப்புங் கல்லுப்பு ரெண்டுந்
தாமே படிகந்தன்னோடு வண்ட
சாமேவுளுந்து நன் மணிக்குன்றும்
வாமென மாவாய் வகையுட னிடியே (கூக)

---

* கொங்கணர் சரக்குவைப்பு முறையில் இதற்குப் 'பூரணை வைப்பு' (கூடன்) என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இடித்துடன் பால் வார்த்தியல்புடன் வென்றிடித்
தொடுத்துடன் பானையிற் றேண்டியே மூடிக்
கடுத்துடன் மண்டலங் கார்த்துநீ வாங்க
விடுத்த வெண்காரம் விளைவதுமாமே (௯௨)

## நவச்சார வைப்பு.

விளைவான சாரம் விபரமது கேள்
தளைவாமதுநீர் தன்னோடு நீரும்
வளைவாமமுரி மகசரி நீருந்
இளைவாகவொன்றாய் கூட்டிநீ சேர்
(௯௩)

சேர்ப்பது வெடியுஞ் சிலமான சுண்ணமும்
கோர்த்ததினோடேகு முறவே யெரித்து
கார்த்திடு மண்டலங் கருவாய்ப் புதைத்தபின்
சார்த்திடுஞ் சரக்கு சாரமதாமே (௯௪)

## துருசு

சாரமாங் துருசு தன்னோடு முறைமைகேள்
காரமதான கல்லுப்புத்தண்ணீரை
வீரமாமூலம் விசையுடன் சேர்த்துப்
பாரமாந்தயிரும் பழமுடனீரே (௯௫)

நீருடனுப்பு நிலையுடன் கூட்டிப்
பாருடன் செப்புப் பாத்திரந் தன்னில்
நீருடன் சேர்த்து நினவுடன் மண்டலம்
வாருட்டெடுக்க வகையுடன் றுருசே (௯௬)

## கௌரி பாஷாணம்.

நெய்யுடன் மஞ்சட் கருவுடன் இன்னரியிற்
பய்யவே வைத்துப் பதிவாக மூடித்
துய்யவே தீயில் சுழலவே யெரித்திட
வய்யனே மஞ்சள் கௌரியுங் காணே (௯௭)

# வீரம்

காணவே வீரங்கருவுடன் சொல்லுவேன்
ஊனமும் வெடியுஞ் சிறந்திடுஞ் சாரமும்
பேணவே கல்லும் பெலமானவிந்துப்புந்
தோணவே துருசு துகைசரி கூட்டிடே (௱௨)

கூட்டிச் சரியெடைக் குருவாம் ரசமதை
மாட்டிப் பொடித்து மாவாயதை யெடு
நாட்டியே காசிக்குப்பி நடுவினி
லூட்டிமேற் சேலையொன்பது செய்திடே (௱௩)

செய்திடு பாண்டத்தியல்பாய் மணலிடு
கொய்திடு குப்பியைக்குள்ளமைத்ததின் மேல்
மொய்திடுமனலை மூக்கள வாயிடு
செய்திடு வனலை யெரித்திடு சாமமே (௱௪)

சாமமெரித்துத் தனிமையாய்க் குளிர்ந்த பின்
றேமெனக் குப்பியை யுடைத்துக் கருவெடு
தாமெனக் கருவிற்றன்றோடு வாதியும்
வாமெனப் பாரையும் வளரன்னபேதியே. (௱௫)

பேதிக்க வொன்றாய்ப் பெருகப் பொடித்திடு
வாதிக்க குப்பியில் வைத்துமுன் போலெரி
சாதிக்க வாறுசாம மெரித்த பின்
றாதிக்க வீரமசையாத வீரமே (௱௬)

வீரமே செய்ய வேண்டினார் சித்தர்கள்
பாரமென் றெண்ணிப் பாடினார் முன்பின்னாய்
சாரமாய் கொங்கணர் சாற்றினார்
வீரமுமாறு மறியாரவன்பாடல்முத்தியே. (௱௭)

முத்தியாம் மச்சமுனி பாடலெண்ணூறுஞ்
சித்தியாய் பார்த்துத் தேறினார் கொங்கணர்
பத்தியு முத்தியும் பார்த்துப் பதவியில்
சித்தம் பெருகி சிலம்பு கண்டானே. (௱௮)

பூரணமாம் பரிபூரணைக் தன்னை
கார் புருமையங் கருணை பெருவெளி
பார் குருநாதன் பரவெளி யதனில்
சார்திலத் திபங் தன்றெளி தானே. (௧௧௯)

## லிங்க வைப்பு.

நானுன லிங்கந் தன்மையைக் கேளு
கோனுன சூதம் ரூருவங்கம் ரெண்டும்
ஊனுக வொன்றுயுடன் சேரதில் ருரு
தேனுன சீனம் சேரதில் பாதியே (௧௨௦)

பாதியைச் சேர்த்துப் பசிவாய் பொடிசெய்து
ஆதியாங் குப்பியிலதிலிட்டெரித்திடு
நீதியாஞ் சாமம் நினைவா யெரித்திடச்
சோதி போலிங்கஞ் சுந்தரமாமே. (௧௨௧)

சுந்தரமாகித் துலங்கு மெண்ணூறு
மந்திரந் தன்னை மகத்தான கொங்கணர்
தந்திரமாகத் தன் மனம் நோக்கி
அந்தரந் தன்னி லாதி கண்டானே. (௧௨௨)

ஆதிச்சரக்கு அறுபத்து நாலும்
சாதிகள் மெச்சவைத்தனர் கொங்கணர்
நீதிகளோடே நினைவறிக் தாக்கால்
சோதித்துருவந்துலங்குவதறியே (௧௨௩)

## மிருதாரசிங்கி.

துலங்கிய சிங்கி துலங்குவன் கேளு
இலங் கருநாகம் சீர் வெடியுப்பு
இலங்குரு சூதமுஞ் சீனமுங் கூட்டிப்
பாலங் கருவாகப் பதிவுடன் பொடியே. (௧௨௪)

பொடிதனைக் *குகையில் பொருந்தவே யிட்டு
அடிதனில் துளையிட்டதன் கீழ்குகையை வைத்
திடமுடன் புடமதில் சென்றது உருகி
வடிந்திடு மடியில் குகையினில் தானே. (௧௨௫)

தானதை யெடுத்துத் தன்மையாய் பார்த்தால்
தேனிறமாயச் சிங்கியுமாகும்
ஆன தோஷங்க ளாறச்சாக்கதுங்
கோலவருளால் குருமுறை பாரே. (௧௨௬)

## பச்சைக் கல்பூரம்.

முறையான பூரம் முடிக்கும் வகைகேள்
நிறையான பூரம் நேர்வடி சீனமும்
கறையாத சாரமுங் கணக்குச்சரியதாய்
துறையாகக் கூட்டித் தோண்டியரைத்திடே. (௧௨௭)

அரைத்திடு சந்தனக் கஷாயந் தன்னிலே
கரைத்திடு கூழுபோலக் கலசந் தனிலிடு
நிறைத்தவால் மிளகுப் பொடியதில் சேர்த்துத்
திரத்துடன் பூமியில் சேரு மண்டலமே. (௧௨௮)

மண்டலஞ் சென்று வகையுடனெடுத்தால்
கொண்டிடு பூரம் குருவாக நிற்கும்
அண்டர்கள் மெச்சுமாதிச் சரக்கிது
தொண்டர்கள் செய்யும் துறையிதுவாமே. (௧௨௯)

## சாம்பிராணி வைப்பு.

ஆமேசாம்பிராணி அதினுடமுறைமை கேள்
தாமே குங்கிலியந் தன்னுடைரக்கும்
வாமெனக் கருவாப் பட்டையுங் கூட்டி
நாமென யிடித்து நன்றாய் பொடித்திடே. (௧௩௰)

※ குழிப்புடமிடவும்.

பொடிதனை யெடுத்துப் போட்டிடு பானையில்
அடியுட னெய்யிலமைத்துப் பிசைந்தடு
வடிவுட னடுப்பில் வைத்து யெரித்திடப்
படிவுடனுருகும் பதந்தனைப் பார்த்திடே. (௧௫௧)

பார்த்திடும் பதந்தான் பதிவாயுருகிடில்
மாற்றிடும் பாயில் வளம்பெறச் சுண்டும்
பேத்திடுகட்டி பெலமா யுருகிடுஞ்
சாத்திடும் பேரு சாம்பிராணி தானே. (௧௫௨)

## நாகவைப்பு

தானென்ற நாகந் தன்மையைக் கேளு
கானென்ற வெள்ளீய காரீயஞ் சூதங்
கோனென்ற மூணுங்குணமா யுருக்கிநீ
பானென்ற கல்வம் பதிவாய்ப் பொடித்திடே. (௧௫௩)

பொடித்திடு மருந்து போடும் விதங்கேள்
கடித்திடும் வெடியுந் தாளகங் கெந்தியும்
அடித்துடன் பொடித்து அமைத்திடு குகைதனில்
நொடித்திட அடுப்பில் நோக்கி யெரித்திடே. (௧௫௪)

எடுத்திடும் போதிலித மாயுருக்கிடு
குறித்து உருகும் குழம்பது தன்னை
வரித்திடு மச்சில் வார்த்திடு கண்விழுந்
தரித்திர மேது தன்னுக சித்தியே.

## வங்க ரசிதம் (ரஜதம்).

கார் வங்கரசிதங் கருத்துடன் கேளு
வேர் வங்கரசமும் வெடியுடன் தாளகம்
நேருடன் ஒன்ருய் நிமித்திரப் பொடிசெய்து
பாரந்தக் குகையில் பதித்து யெரித்திடே. (௧௫௬)

மெரித்திடும் போதிலிளகி யிறுகிடும்
பரித்திடும் வங்கரசித மீதென்று
குறித்திடும் சித்தர் கூட்டும் வகையிது
விரித்த பொருளின் விபரமதாமே. (கசச)

## பெருங்காயம்.

உண்மையாயி(ஹி)ங்கு உரைக்கிறேங் கேளு
நன்மையாயுள்ளி நயமுடன் கடுகும்
செம்மையாய் கூட்டிச் சேர்த்தரை மைப்போல்
உண்மையாய் வெய்யிலில் உலர நீவைத்திடே (கசரு)

உலர்ந்திடு வேப்பம்பட்டைத் தைலம்
நலந்திகளா நயமாயெடுத்திடு
சலந்தனிற் சரக்கைச் சேர்த்துப் பிசைந்திடு
குலந்தனிலாதி கூட்டி உருட்டிடே. (கசசா)

உருட்டியே பீங்கான் தாளியிற் சேர்த்திடு
இருட்டினில் மண்டல மிறுத்தி யெடுத்திடக்
கருத்துடன் சமைந்து காரணமாகித்
திருத்தமாய் காயஞ் செம்மையாய் வீசுமே. (கசஎ)

வீசுமே காயம் வீறுகளேறிக்
கூசுமே நாசிகுமுற வெரித்திடும்
வாசிகள் நீரை வாங்கித் தகித்திடுந்
தேசுகளான தேகத்திற்குறுதியே. (கசஅ)

## தொட்டிப்பாஷாண வைப்பு.

சித்தமாந் தொட்டிசெப்புவன் கேளு
பெற்றிடுவங்கம் போதுரெண்டுஞ்
சுத்திடு ரசமுஞ் சுகமுடன் கூட்டிச்
சத்தமுங் கெந்தியுந் தாளகஞ்சேர (கசகூ)

சேர்த்திடு துருசு செம்மையாயேழும்
பார்த்தொரு நிறையாய்ப் படியப் பொடித்திடு
வார்த்திடு குகையில் வளமா யெரித்திட
பார்த்திடத் தொட்டிப்பாஷாணமாமே. (௧௫௧)

## கெந்தி பாஷாணம்.

சத்தியாங் கெந்திப்பாஷாணத் தன்மை கேள்
முத்திய வெள்ளையுமூது வீரப் பச்சையும்
சித்தி மனோசிலை சிறுத்த நாகமும்
பத்தியக் கெந்தகம் பாம்பான லிங்கமே. (௨௭௩)

லிங்கரசமுடன் நேர்சரி கூட்டியே
அங்கமதாக அமர்த்திப் பொடித்திடு
சங்கையுடனே தாமிரக் குப்பியில்
உங்கக்கொடுத்து உறுதிமண் சீலையே. (௨௭௪)

சீலைவலுவாய்ச் செய்து மண்தாளியில்
ஆலயமாக அமர்த்தி மணலிடு
வாலையைப் போற்றி வைத்து நல்தியெரி
ஆளுமுருகித் துவள யிறுகுமே. (௨௭௫)

இறுகுமே ஆறுசாம மத்தியல்புடன்
மருகியிறக்கி மறுநா ளெடுத்திடு
குறுகிய குப்பியைக் குணமாயுடைத்திடுத்
திருகிய கெந்திப்பாஷாணஞ் செம்மையே.

# அநுபந்தம் 2.

மச்சமுனி நாயனுர் கலைஞானம் எண்ணூறு என்ற
சரஸ்வதிமஹால் 32 நெ. சுவடியிலிருந்து
சரக்குகளின் வைப்பு முறைகளைப்பற்றிய
சில செய்யுட்கள்.

## சார வைப்பு.

கொள்ளறிய நவசார வைப்பைக் கேளு
குதிரை மாடானை கழுதை மாந்தர்
விள்ளறிய வொட்டகை யோடேழுநீரும்
விட்டொன்று யெட்டுக்கோர் வெடியுப்போடு
தள்ளறிய சூடனோடு சீனங்கூட்டி
சார்ந்தெரித்துப் பிட்டுப்போற் பொடித்துக்கொண்டு
பள்ளமுள்ள வாய்குவிந்த பாண்டந்தன்னிற்
பாதியிட்டுச் சில்லிட்டுச் சீலைசெய்யே (மக)

செய்யப்பா கமலம் போலஞ்சுநாட்டான்
திறமாக வெரித்தாறி யுடைத்துவாங்க
மெய்யப்பா நவசாரம் பலகை போலே
வெளுத்திறுகி நிற்குமதை யெடுத்துக்கொள்ளு
செய்யப்பாவூற சாரவைப்பைக் கேளு
சிறுநீரிலுவர் நீரு நாலுக் கொன்று
துய்யப்பா கரைத்துக் காய்ச்சினுக்கால்
துடியானவூற சாரமென்பார் காணே. (மஉ)

## துருசு வைப்பு.

சார்வரிய செம்பதனுல் பாணேசெய்து
    தனித்திருசேர் கல்லுப்பு இனங்க சினம்
சிராகப் பொடித்து அந்த பாண்டத்திட்டு
    செம்பீரப் பழச்சாறு மோரும்விட்டு
பூராமல் வாய்மூடிப் பெலக்கச்செய்து
    புதைப்பது மேற்கத்த மிட்டுத்திங்களாறில்
பாருநீ துருசியது கட்டியாகப்
    பச்சைநிற மாயிருக்கும் பாங்காய் வாங்கே (௰எ)

## சூடன் வைப்பு.

உப்பிணங்கன் சேர் பத்து வாழைதன்னி
    லுருகிழங்கினீ ரிருபான் படிதான்கூட்டி
செப்புப்பாண்டத் தெரிக்கக்குழம் பாமத்தில்
    சேர் கருவாப்பட்டை யினிற்றைலம் வாங்கி
தப்பில்லா படிரெண்டு விட்டுக்காய்ச்சிப் பிட்டு
    தன்பதத்தில் காய்ச்சித்தாறை விட்டுத்
துப்புடனே வுளியதனுல் வெட்டிவாங்கிச்
    சூடனென்ற ஆலத்திப் பூரமாமே. (உ௰)

## பச்சைக்கல்பூர வைப்பு.

பூரணத்தான் பன்னீரில் நணேத்துத் தட்டி
    புகழுதாலம் பத்தோலைச்சிங்கிப் பூட்டி
காரமென்ற நீரதனுல் கலந்துகட்ட
    கடப்பாரையா லழுத்துக் காற்றில்லா
சார்பினிற் மேல்பாரம் வைத்துத்திங்களொன்று
    தரித்தெடுக்கப் பலகைகள்போல் தழும்பாய்நிற்கும்
காரமென்ற வாசனேயுமிதுதான் பச்சைக்
    கல்பூரமென்பார்கள் கலைவல்லோரே. (உக)

## வெங்கார வைப்பு.

நோயறுக்கும் படிக்காரம் நொருக்கிக்கொண்டு
நுகர்நலிகுடத்திட்டுக் கடுகினெண்ணெய்
ஆயவிட்டுப் பிசறியதிற் சதிரக்கள்ளி
யச்சாறு பாலுமதில் முழுகவிட்டு
பாயவதில் மேல்மூடி கீழும்மேலும்
பரியினுட கத்தம்விட்டுப் பாங்காய்மூடிச்
சாயாமல் மண்டலஞ் சென்றெடுத்துப் பார்த்தால்
தழுக்காக வெங்காரந்தானும் பாரே. (உஅ)

## மிருதார்சிங்கி வைப்பு.

கூறுன காரீயம் நாலுக்கொன்று
கூட்டுசுரைக் கெந்தகத்தை யீயத்திற்கு
மீறுமல் லெட்டொன்று வெடியுப்பிட்டு
மேற்பொடித்து ஈயஞ்சட்டியிலுருக்கி
சீறுமல்பொடியிட்டு வறுத்துவைத்து
சிறுகலசத்தரைத்திட்டு மூடிமண்செய்
தாரிரெண்டு சாமம் பூப்போலெரித்து
அதையெடுக்க மிருதாரச் சிங்கியாமே. (கூ)

## சீதப்பாஷாணம் வைப்பு.

ஓர்சீனப் பொரிசங்கு சுன்னங் கல்லுப்
போடுவெள்ளைப் பாஷாணம் வகைபத்துப்பலந்தான்
பார்சாரம் பலம்ரெண்டு சூதம்பத்து
பலமாறுந் திராவகத்தால் பாங்காயாட்டி
சீரெட்டு நாளரைத்துக் குப்பிக்கிட்டு
திறமாகப் பன்னிரெண்டு சாமந்தீயை
யாரவெரித் தாறிப்பின் னெடுத்துப்பார்க்க
வடா சீதபாஷாணமாகும் பாரே. (கூரு)

# கௌரிபாஷாணம் வைப்பு.

கொண்டவெள்ளை நாவிலொன்று சத்திகூட்டி
　　குப்பிக்குள்ளிட் டெரித்து நாலுசாமம்
விண்டாறி யுடைத்தெடுத்துப் பார்த்தால் மக்காள்
　　மேனிமஞ் ளடுக்காகக் கௌரியாகு
மண்டுமுற் சாரசத்தின் வைப்பைக்கேளு
　　வானரசம் நாலுக்கு வாணக்கெந்தி
தண்டவே தொந்தித்துக் குப்பிக்கிட்டு
　　சமத்தாக எரித்தெடுக்கச் சிவப்பாம் பாரே.

# அநுபந்தம் 3.

கொங்கணர் பலதிரட்டு 500 என்ற
சரஸ்வதிமஹால் சுவடி நெம்பர் 34-லிருந்து
கீழ்க்கண்ட வைப்பு முறைகள்
எடுக்கப்பட்டிருக்கின்றன.

## துருசு வைப்பு.

சித்தையிலே உத்தமந்தான் துருசுவித்தை
விளங்கியிதன் பிறப்பை நன்றாய் விரித்துச்சொல்
பத்தையிலே செம்பாலே பாத்திரந்தான் பண்ணிப் [வேன்
பரிவாக வெடியுப்புங் கல்லுப்பும் போட்டு
முத்தயிலே பழச்சாறும் தயிரும் வார்த்து
முனையான குதிரையுட கத்தும் வார்த்து
அத்தயிலே குழிவெட்டி வைத்திபோட்டு
அதன்மேலே மண்ணிட்டு மூடுவாரே

மூடிவைப் பாரறுதிங்களெட்டுந் திங்கள்
முனையாகப் பசுமைநிறந் துருசு ஆகும்
நீடிவைப்பாரதை யெடுத்துத் துருசுஎன்று
நேராகயிதை யெடுத்துக் குருவைசெய்வார்
கூடிவைப்பாரிதுக் குளிந்த மகிமையென்ன
குலாவிநின்ற சிவன்செம்பு சத்தியுப்பு
நாடிவைப் பாரிதனாலே யித்தனையுமாச்சு
நாமறியோம் நாமறியோம் துருசுப்போக்கே (உருடு)

## சவ்வீர வைப்பு.

கேளப்பா கல்லுப்பு வெடியுப்புச்சாரங்
கெடியான பேதியுடன் சீனக்காரம்

நாளப்பா துருசினுட ஞறுங்கூட்டி
நலமாக விங்தெடைக்கு ரசந்தான் வாங்கிச்
சூளப்பா திராவத்தால் ரஸத்தைக்கொன்று
துடியாக இதனோடே கலந்துகொண்டு
நீளப்பா குப்பியிட்டு வெரிக்கமேலே
நெருங்கின்ற பதங்கமது வீரந்தானே (உஎஙு)

வீரமென்றால் மகாவீரன் சுத்தவீரன்
வேதைக்கோ ரணவீரன் சுண்ணவீரன்
காரமென்றால் கடுங்காரங் காணியுண்ணச்
சார்வான கைமுறையாயிதை விட்டால்வேதைபோச்
சாரமென்றால் கடுஞ்சாரம் பட்டவிடம்வேகுஞ் [சுச்
சரக்கினொடு சூதமின்ற சையோக வேகந்
தூரமென்றால் வெகுதூரமிதைத் தொட்டாலோடுந்
துடியான வீரத்தைக்கட்டக் கேளே.

# அநுபந்தம் 4.

---

உரோம ரிஷி ஐந்நூறு என்ற
சுவடியிலிருந்து கொங்கணர் சரக்கு
வைப்பில்கண்ட சரக்குகளைப்பற்றிய முறைகள்
மாத்திரம் இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

---

## துருசு வைப்பு

காட்டுவேன் வாதத்திலாதி யென்ன
கருவான துருசினுடவைப்புகேளுஞ்
சூட்டுவேன் சீனமது பலந்தானொலு
துப்பறவாம் வெடியுப்புப் பலந்தானொலு
கூட்டுவாய் கல்லுப்புச் சேர்தானெட்டு
குமுறவே பொடிபண்ணி சொல்லக்கேளும்
பூட்டுவேன் செம்பானபாண்டந்தன்னிற்
பொடித்திட்டுப் பழச்சாறுந் தயிரும் வாரே (உருக)

வார்த்துமே பழச்சாறுபடிதான் ரெண்டு
மைந்தனே கரிமேதைத் தயிர்தானொன்று
பார்த்துமே கலக்கிட்டுச் சீலமண்செய்து
பக்குவமா யரையளவு குழிதான்வெட்டி
கார்த்துமே யொட்டைலெத்தி குதிரைலெத்தி
கவியவே தான்மூடி மண்ணுங்கொட்டி
தூர்த்துமேன் மூடிவிட்டாறு திங்கட்
டொச்சமறக் கலந்தபின்பு சொல்லக்கேளே (உருஅ)

சொல்லுவேன் துருசென்ற பேருமாச்சு
        சொற்பெரிய மூலரென்று பேருமாச்சு
வெல்லுவேன் வாதவித்தை தனக்கேயாதி
        வேதாந்த சாரமென்று மிதற்கேபேரு
கொல்லுவேன் சூதத்தை யென்றுநின்ற
        குடரோமுள்ள மதயானைக் கோவிக்கோவி
மில்லுவேன் சரக்குகளைத் தலைதூக்காமல்
        மீரடங்கக் கட்டுகிற குருவுமாமே (உசுக)

## வீரவைப்பு.

இனியதொரு சரக்குவகை யின்னங்கேளு
        இயல்பான கல்லுப்புப் பலந்தானாறு
கனியதொரு பூநீறு பலந்தான்ரெண்டு
        கண்டரென்ற துருசுதான் பலமும் நாலு
வனியனெனுஞ் சீனமது சொல்லக்கேளு
        மைந்தனே பலமது தானொன்றரையுமாகும்
பிணியனென்று நோயகலுஞ் சாரந்தானும்
        போக்கோடே பலமரைதான் புகழாய்க்கூட்டே
(உசுசு)

கூட்டவே வெடியுப்புப் பலந்தான்கேளு
        குறையாம லொன்றரையாம் பலமேதூக்கி
வாட்டவேயிவை யெல்லாம் கல்வத்திட்டு
        வப்பனே துருசப்பு வறுத்துப்போடு
காட்டவே யொன்றுமில்லை திராவகத்தினாலே
        கனக்கவே யரையாதே மத்தித்தப்பா
ஊட்டவே சிறுதணலில் வறுத்துக்கொண்டு
        உத்தமனே குப்பிதனி லடைத்திடாயே (உஎய)

அடைத்துமே யரைவாசி மட்டும் போட்டு
        அப்பனே வாலுகையில் முன்போல்வைத்து
படைத்துமே முச்சாமந்தியைப் போட்டுப்
        பருவமாய் ராக்காலமாறப் போட்டு

விடைத்துமே நாலாநாட்டையைப் போடு
விபரமுடன் பன்னிரண்டு சாமமாகு
முடைத்துமே யைந்தாநாட் டன்னினீயு
முற்றுநீ பார்த்திடவே வீரந்தானே (உஎக)

## பூர(ண)வைப்பு

கேளடா சூடனது பலந்தானென்று
கெட்டியாய்ப் பூநீறு பலமதொன்று
நாளடா வெடியுப்புக் கழஞ்சுரெண்டும்
நாட்டுவாய் கல்லுப்புக் கழஞ்சியொன்று
சூளடா சாரமது கழஞ்சியொன்று
துப்புறவாய் வெங்காரம் கழஞ்சியொன்று
கேளடா வாராமற் கல்வந்தன்னில்
கொட்டியே தானரைக்கக் கூறுவேனே (உஎச)

கூறுவேன் கல்லுப்பை வறுத்துப்போட்டுக்
கொடியதொரு சரக்கையெல்லாஞ் சுகமாய்ப்போடு
ஆறவே பசுவின்நெய்யதிலே கொஞ்சம்
அப்பனே விட்டுநீ ரவியிற்போடு
ஊறவே சாமமது சென்றபின்பு
உத்தமனே சூடனது பொங்கிநிற்குந்
தேறவே பதமென்று மறுகால் நீயுந்
திர்க்கமாஞ் சூடனதிற் கழஞ்சிபோடே (உஎரு)

போட்டுமே புழுகதிலே கழஞ்சுகூட்டிப்
பொங்காமல் நெய்யைவிட்டு மறுகாலாட்டு
ஊட்டுமே யுறுதியாயாட்டிக் கொண்டு
உத்தமனே சாமமது சென்றபின்பு
நாட்டுமே காசியென்ற மேருக்கேற்றி
நாதாந்த சக்தியைநீ பூசைபண்ணி
தேட்டுமே யிதையிட்டாற் றேட்டமுண்டே
சிவசிவா தாளிதனில் மணலைக்கொட்டே (உஎசா)

கொட்டியே நாலுவிரல் கனந்தானப்பா
கூறுவேன் கல்லுப்பைப் பொடியாய்ப்பண்ணி
எட்டியே நெற்கனமாயதன் மேலிட்டு
உறுதிபெறக் குப்பிதனை நடுவில்வைத்து
கட்டியே மணலைக் கழுத்துமட்டுங்
கனக்கவே செப்பனிட்டுச் சொல்லக்கேளு
பட்டியாய்த் திரியாதே குப்பிவாயை
வழக்கமாய்த் திரிந்துநீ வைத்திடாயே (உஎஎ)

வைத்திட்டு வாலுகையில் தீபம்போல
மைந்தனே கடிகையது சென்றபின்பு
பொய்த்திட்டுப் போகாது புகைமேற்செல்லும்
பொருமியே குப்பிவா யுடைத்துப்போகுங்
கைத்திட்டமாகவேதான் கமலத்தீயாய்க்
கவனமாய்ப் போட்டுவிடு சாமமூன்று
மெய்த்திட்ட மாகவேதானனல் தான்மீறி
வெடித்துவிடுங் குப்பியது வீழ்வாய்ப்போமே (உஎஅ)

போகாமற் பத்திரமா யிருந்துகொண்டு
பூரணியை மனதில்வைத்துத் தியானஞ்செய்து
ஏகாமற் சரக்குகளைப் பார்த்துக்கொண்டு
என்மக்காள் கவனமதா யிருந்துகொண்டு
சாகாமனின்றதொருதலையுமாகுந்
தண்ணுடா சரக்குகளை யிந்தபூரம்
வேகாமற் சரக்குகளை வேகவைக்கும்
வெகுசுருக்குச் சுண்ணத்திற் காதியாமே (உஎகூ)

ஆதியாங் குப்பிதனையாறப் போடு
அப்பனே யுடைத்துப்பார் பூரந்தானுஞ்
சோதியா மிளந்தேங்காய் போலநிற்குஞ்
சொல்லுவே னிதன்பெருமை சுண்ணத்தாதி

வாதிகளே யிதையிடித்து வைத்துக்கொண்டு
மகத்தான சரக்குகளைச் சுன்னம்பண்ணும்
பாதியாய் நின்றதொரு மதியைச்சூடும்
பரனெனக்குச் சொன்னவித்தை பார்த்தோம்நாமே
(உஅ௪)

## சூடன் வைப்பு.

கேளடா சூடனுட வைப்புதானுங்
கீர்த்தியாய்ச்சித்தர் சொல்லவே யான்
தாளடா வாழையைத்தான் வெட்டிப்போட்டு
நலமாகக் கிழங்கதனைக் குடைந்துவைத்தாற்
சாளடா மறுநாட்டா னுற்றுப்பாரு
சலமதுதான் னிரம்பிநிற்குமெடுத்துக்கொண்டு
வாளடா படிதானு மிருபதாகு
மைந்தனே யெடுத்துநீ பாண்டத்தூத்தே (உஅ௫)

ஊத்தடா செப்பினுட பாண்டந்தன்னி
லுத்தமனே வெடியுப்பு வைந்தாங்காய்ச்சல்
சேத்தடா வுப்பதுதான் முறிக்கக்கேளுந்
திறமையா யுப்புத்தான் பாண்டத்திட்டு
வாத்தடா காடியதுமமுங்கவிட்டு
மைந்தனே குங்குலியம் பத்துக்கொன்று
பாத்தடா வெள்ளையா யெடுத்துக்கொண்டு
பக்குவமா யுருக்கியதிலிட்டிடாயே (உஅ௬)

இட்டுமே யடுப்பிலிட்டுக் காய்ச்சும்போது
இதமாகக் குழம்பதுபோற் பதத்தைப்பார்த்து
தொட்டுமே யெலுமிச்சம் பழத்தின்சாறு
சுருக்கிடவே குத்திநீ காய்ச்சும்போது
காட்டுமே யுலையதனிற் கருதிப்பாரு
கணக்கவேயுறைந்து விடும்பத மென்றேதாம்
ஒட்டுமே புதுச்சட்டி தன்னிலேதான்
புகழ்பெறவே யூற்றிவிடு யுப்புநீரே (உஅ௭)

நீரிட்ட சட்டியைத்தான் மூடிப்போடு
நிறைந்துமே மூன்றுநாளானபின்பு
காரிட்ட வுப்பதுதானென்ன சொல்வேன்
கம்பியென்றால் பெருங்கம்பி யாகும்பாரு
சீரிட்ட வுப்பதனைக் காயப்போடு
தீர்க்கமா யெட்டுசேர் நிறுத்துக்கொண்டு
வாரிட்ட வாழையுட ஜலத்திலேதான்
மைந்தனே கலக்கிவிடு வகையிதாமே (உஅஅ)

வகையான தொன்றுமில்லை பாண்டந்தன்னை
மைந்தனே யடுப்பில் வைத்துக்காய்ச்சும்போது
இகையான கருவாப்பட்டை தன்னை
யிதமாகத் தானெடுப்பாய் வீசையொன்று
துகையான விதையிடித்துப் பாண்டத்திட்டுத்
துப்புறவாய்க் காடியது தூணிவிட்டுப்
பகையில்லா வெல்லமொடா பனையின்வெல்லம்
பாங்குடனே சேரிரண்டு பார்த்துப்போடே (உஅகூ)

போட்டுமே கலக்கி நீயூறப்போட்டு
போக்கோடே மத்தைவிட்டு கிண்டும்போது
ஊட்டுமே கையிடையிற் சிறியதானால்
உத்தமனே மறுபாண்டந் தன்னிலூற்றி
காட்டுமே யடுப்பிலிட்டுப் பாலைமூடி
கவிழ்த்தியே குழையிலிட்டு வாங்குவாங்கு
தீட்டுமே திராவகம் போலிறங்கும்பாரு
திறமான பீங்கானிற் பதனம்பண்ணே (உகூய)

பண்ணவே முன்னுரைத்த வாழைநீர்தான்
பற்றியே வருகையிலே திராவகத்தைவாரு
எண்ணவே படிரெண்டு கூடவாரு
இதமாகக் கிண்டியே மூடிப்போடு

-----

கண்ணவே காற்றில்லா விடத்திலேதான்
 கனமதாய் மூடியடா சொல்லக்கேளு
வண்ணவே யொன்பது நாட்கழிந்ததாலுல்
 வாங்கு பெறத்திறந்துபார் சூடனுமே (உகூக)

ஆகுமே யாலத்திப் பூரமாச்சு
 அப்பனே யதைக்கட்ட யாராலாகும்
போகுமே சுண்ணமென்ற கட்டுக்கெல்லாம்
 போக்கோடே பாறையுப்பு பண்ணினுக்கால்
ஏகுமே கலையென்று மிதற்குப்பேரு
 எண்ணமென்றுந் தீயென்று மிதற்குப்பேரு
தாகுமே யக்கினியாங் கூர்மமாச்சு
 சச்சிதாநந்த வெளிதானே பாரே (உகூஉ)

---

# அநுபந்தம் 5.

அகஸ்தியர் அருளிய

## அமுதகலை ஞானம் ஆயிரத்திருநூறு

என்ற புஸ்தகத்திலிருந்து கொங்கணர் சரக்குவைப்பு
முறைகளில்கண்ட சரக்குகளுக்குமாத்திரம்
செய்யுள் கூறப்பட்டுள்ளது.

### சீனவைப்பு.

பாரப்பா சரக்கினுட வைப்புக்கேளு
பாருப்பு தன்னுடனே கல்லுப்புங்கூட்டி
ஊரப்பா பழச்சாறு தயிருங்கூட்டி
உடன்சேர்த்துப் பாண்டத்தில் விட்டுமூடி
காரப்பா குழிவெட்டி யெருவைப்போட்டுக்
கருவான பாண்டமதை யதன்மேல்வைத்து
சேரப்பா எருப்போட்டு சமாதிவைத்தால்
திறமாக மண்டலத்தில் சீனமாச்சே (கூ௭௭)

### பூரவைப்பு.

ஆச்சப்பா பூரத்தின் வைப்பு கேளு
அரகரா சீனமொடு நாதங்கூட்டி
நீச்சப்பா குந்திரிக்கம் இடைதான் சேர்த்து
நினைவாகத்தான் பொடித்து சயநீர்விட்டு

மூச்சப்பா போகாமல் தாய்தான் கூட்டி
முன்னவனைத் தான்பணிந்து குப்பிக்கேற்றி
பாச்சப்பா நெல்லவிக்கும் பானைதன்னில்
பக்குவமாய் வைத்தெடுக்கப் பூரமாச்சே (௯௪௮)

ஆச்சப்பா பூரமதுகார மென்பார்
அன்பான சவுக்கார வழலையென்பார்
காச்சப்பா ரவிபீஜமென்பார் சித்தர்
கருவான அக்கினியின் கோத்ரமென்பார்
பாச்சப்பா வாதத்திற்கில்லா விட்டால்
பாயாது சரக்கொன்றும் பழுக்காதய்யா
நீச்சப்பா ரவியில் மைந்தா நெறியான
ரவியறியார் நிலைத்திடாரே. (௯௪௯)

நிலையாது சுன்னத்துக்கிதில்லாவிட்டால்
நேரான குளிகைக்கு மாகுமாகும்
சிலையான கற்பத்திற் காதிபீடம்
சேர்ந்துநின்ற மெழுகுக்கு மாதிபீடம்
துலையான செயநீர்க்கு மாதிபீடம்
கருக்கான பூரத்திற்காதி கேளு
விலையான வெங்கார வைப்புக்கேளு
மேதினியிலாரறிவார் லவணப்போக்கே. (௯௫௦)

## வெங்கார வைப்பு.

போக்கான நிலவுப்பு கல்லுப்போடு
புகழான படிகத்தூளண்டவித்து
தாக்கான மணிஉளுந்து மாவோடொக்கத்
தனிக்கள்ளிப்பால் வார்த்துக்கிண்டி மைந்தா
ஆக்கான பானைதனிலிட்டு மூடி
அருமையுள்ள சிறுநீருங் கூடவிட்டு
நீங்கான மண்டலந்தான் சமாதிவைத்தால்
நிலைத்ததொரு வெங்காரப் பலகையாச்சே. (௯௫௧)

ஆச்சப்பா வெங்காரந்தன்னால் மைந்தா
அப்பனே உண்டாச்சு சரக்கோ கோடி
காச்சப்பா வுருக்கினத்திற் காதியாகும்
கருவான வேதைக்குமாதியாகும்
பாச்சப்பா சத்துக்களுக்குயிரே யாகும்
பாங்கான நீருக்கும் சுன்னத்திற்கும்
பேச்சான வெடியுப்புச்சீனம் ரெண்டில்
பெலமான உளுந்தினுட மாவைச்சேரே. (சுருஉ)

சேரப்பா கள்ளிப்பால் விட்டுநன்றாய்த்
திரமாகக் கிண்டிநன்றாய்ப் பாண்டத்திட்டு
நீரப்பா விட்டுநன்றாய் சமாதிவைத்தால்
நிசமாகத்துய்ய நிலை வெங்காரமாச்சு
காரப்பா வெண்காரம் பொரிக்காரம் ரெண்டுங்
கருவாளி தானறிவார் மற்றோர் காணார்
பேரப்பா சொல்லவென்றால் நாவேயில்லை
பிசகாத சாரத்தை சொல்லக்கேளே. (சுருகூ)

## சார வைப்பு.

கேளப்பா கரிமாவும் சிறுமாவோடு
கெடியான அமுரியொடு ஆவின்நீரும்
நீளப்பா அஞ்சிவரை நீருங்கூட்டி
நிலைத்த வெடியுப்புடனே கல்லுச்சுன்னம்
வேளப்பா எரித்தோனைத் தியானம்செய்து
விசையான நீர் நின்றபடியே தாக்கி
கேளப்பா வாராமல் பாண்டத்தூட்டிக்
கோனென்ற இடமதிலே சமாதிவெய்யே. (சுருச)

வையப்பா மண்டலத்திற் கப்பால்நீயும்
மைந்தனே சார்வான யெடுத்துப்பாரு
மெய்யப்பா சொல்லுகின்றேன் காரசாரம்
மெய்யான சாரமதை யார்தான்காண்பார்

கையப்பா வுதவுவது போலேமக்காள்
கைப்பான வுப்பிற்கு வுறுதியாச்சு
எய்யாத சாரைகடி பட்டுதானால்
எழுப்பாமல் விறடக்குஞ்சாரந்தானே. (௬௫௫)

சாரமென்றால் வழலைகடிக் கொண்டுதானால்
சரக்கனைத்துமாண்டு தடாதப்பேயில்லை
காரமென்ற கருவழலைக் கடிதானப்பா
கடுஞ்சுருக்குச் சாரத்திற்கதிகமாகு
பாரமென்ற சாரமதைப்பணிய வேணும்
பணிந்ததொரு சாரத்தில் நிறுத்தவேணும்
ஆரமென்ற அநிசாரகாரமப்பா
அனைத்துயிருக் குடலுயிரே யறிந்துபாரே. (௬௫௬)

## துருசு வைப்பு.

பாரப்பா துருசினுடவைப்புக் கேளு
பாங்கான கல்லுப்புச் சீனங்கூட்டிப்
பாரப்பா பழச்சாறுந் தயிருங்கூட்டி
தன்மையுள்ள அமுரியதுங் கூடச்சேர்த்து
சேரப்பா தாம்பிரப்பாத்திரத்தில் மைந்தா
செம்மையுடன் குழிவெட்டிமைந்தா நீயுங்
காரப்பா கேசரியினெருவைக் கொட்டிக்
கருவான பாத்திரத்தை யதன்மேல்வையே. (௬௫௮)

வையப்பா வாய்மூடிமேலுங் கொட்டி
வளமாகத்தான் மூடி மைந்தாகேளு
மெய்யப்பா சதாசிவத்தைப்போற்றி நீயு
மேன்மையுடன் மண்டலத் துக்கப்பால் வாங்கி
செய்யப்பா ஆறவிட்டுத் திறந்துபாரு
சிவசிவா என்சொல்வேன் துருசுநேர்மை
கையப்பா புளிப்புடனே புளிப்புசேர்த்து
கருவான கறுப்புடனே சேர்ந்துபோச்சே. (௬௫௯)

## சீன பாஷாண வைப்பு.

பாரப்பா சீனமொன்று வெடியுப்பொன்று
பரமான விந்துடனே மூன்றுங்கூட்டி
சேரப்பா தாம்பிரக்கிண் ணத்துள்ளே
சேர்க்கையிலே கேசரியின் நெய்யைவார்த்து
நேரப்பா மேற்கிண்ணத்தாலே மூடி
நிலைத்ததொரு பாண்டத்தில் மண்ணும்விண்ணும்
காரப்பா பாண்டத்தி லிட்டுநல்ல
கருவாக வட்டகையை யதன்மேல் வையே. (௬௬உ)

வைத்ததின்மேல் முன்போல நிறையக்கொட்டி
வாகாக மேல்மூடி மண்ணுஞ்செய்து
விஸ்தாரமாகவே நீயடுப்பில்வைத்து
வீறடங்க வொருசாமமெரிப்பாய் மைந்தா
முத்தானநிறம் போலே நாலுஞ்சேர்த்து
மெழுகுபோலுருகியது வொன்ருய்சேரும்
பத்தான பூரணத்தைத் தியானம்பண்ணிப்
பதமாக ஆறவிட்டு யெடுத்துப்பாரே. (௬௬௩)

பாரப்பா வட்டகைக்குள்ளுருகி நல்ல
பளிங்கதுபோல் பாஷாணம் பண்பாய்காணும்
ஆரப்பா அறிவார்கள் பாஷாணத்தை
அறிந்தவர்க ளறிவார்க ளம்பரத்தை
மேரப்பா வென்பார்கள் வெண்கண் டரென்பார்
விசையான மதியென்பார் நிலவுப் பென்பார்
சாரப்பா சாரைக்கு நாகமென்பார்
சகலசரக் கானதற்கும் சத்துருதான்பாரே. (௬௬௪)

## கெந்தி பாஷாணம்.

பாரப்பா கெந்தி பாஷாணந்தன்னை
பகருகிறேன் புலத்தியனே பண்பாய்க்கேளு
யாரப்பா அறிவார்கள் கெந்திரசந்தன்னை
அணைத்திடுவா யதன்பிறகு செயநீர்வாங்கி

காரப்பா பூமியுட நாதந்தன்னை
கருவாகத்திச நாதம் வாங்கி மைந்தா
சேரப்பா முன்சொன்ன நீரில்மைந்தா
சேர்த்து மிகக்கரைக்கவேயனலாம் பாரே. (கூஎஉ)

பாரப்பா அனல்மீறிச்சுடும் போதன்னில்
பக்குவமாய் மூப்பூவுங் காலுங்கூட்டி
சேரப்பா அடிமுடியுங்கூடச் சேர்த்துத்
திறமாகக் கிண்டியதை மேல்வாய்மூடி
மாரப்பா மண்சிலை வலியச்செய்து
மைந்தனே அடுப்பேற்றி அலைவில்லாமல்
காரப்பா அலைவில்லாப் பாண்டந்தன்னில்
கருகவே தணல்மூட்டி யெரித்திடாயே. (கூஎங)

எரிக்கவே மருந்தெல்லாம் பாண்டத்துள்ளே
யிளகி மெள்ளவுருகியது கல்போற்சேருந்
தருக்கவே யனலாறும் போதுமைந்தா
தப்பாமலுடைத்து மிகத்தயவால் வாங்கி
பெருக்கவே பீங்கானில் பதனம்பண்ணி
பெருமையுள்ள மௌனமதாய் குருவைப்போற்றி
உருக்குவெண்ணெயிது வாகுமென்று மைந்தா
வுண்மையுடன் குன்றிநிறை யெடுத்துக்கொள்ளே.
(கூஎரு)

## கௌரி பாஷாணம்.

பண்ணப்பா கௌரியுடமுறையைக் கேளு
பண்பான புலத்தியனே அறிவுள்ளோனே
விண்ணப்பா லவணமொடு காரசாரம்
விசையான படிகமொடு பூரணமுங்கூட்டி
கண்ணப்பா மஞ்சளென்ற கருவுங்கூட்டி
கருக்கூட்டி கல்வத்திலாட்டி நன்றாய்
மண்ணப்பா சட்டிதனில் வைத்துமைந்தா
மைந்தனே அடுப்பேற்றி யெரித்திடாயே. (கூஎசு)

எரித்திடவே சட்டிக்குள் மருந்துதானு
மிளகிமெள்ள வுருகியது மஞ்சள்போலே
பெருத்தகல்லுப் போலுறைந்து மஞ்சளாக
பெருமையுள கௌரியென்ற பெயரேயாகும்
குறித்தபொருள்க் காதியென்ற கௌரியாகுங்
குணமான கெவுரி ரசமுறைதானப்பா
பரித்தகடிதற்கு நிகரொவ்வாதையா
பாலகனே யிதனுடைய பரிசுகேளே (சுஎஎ)

## சௌவீர வைப்பு.

பாரப்பா சவ்வீர வைப்புகேளு
பரமான வெடியுப்புப் பத்தாங்காய்ச்சல்
காரப்பா கல்லுப்பு சீனக்காரங்
கட்டியதோர் நவச்சாரஞ் சவுக்காரந்தான்
வீரப்பா தானடங்கும் பொரிக்காரந்தான்
வெள்ளியென்ற துருசுடனே பேதிகெந்தி
சேரப்பாமுப்புவுங்கூடக் கூட்டி
சேர்த்து மிகுத்துகை பார்க்கப்பத்துமாச்சே. (சுஅக)

ஆச்சப்பா பத்துவகை சரக்கொன்றாக
அனைத்துமே அந்திடைக்குச் சூதம்சேர்த்து
பாச்சப்பா கல்வத்தில் பொடியைத்தாக்கி
பார்க்கையிலே ரசமாண்டு மொன்றாய்ப்போகும்
நீச்சப்பா ஜெயநீரால் பிரசரிக்கொண்டு
நேர்மையுடன் காசியென்ற குப்பிக்கேற்றி
காய்ச்சப்பா மண்சீலை ஏழுஞ்செய்து
கருவான குப்பிதனைப் பதனம்பண்ணே. (சுஅஉ)

பண்ணிய தோர்குப்பிதனை பாண்டத்துள்ளே
பக்குவமாயுப் போடு பதிவாய்ப்போடு
உண்ணியே குப்பிதனை நடுவேவைத்து
உத்தமனே மேலுமந்தப் பொடியைப்போட்டு

நண்ணுறவே பாண்டமிதின் வாயைமூடி
நலமாக மண்சீலை நன்றாய்ச்செய்து
தண்ணுறவாய் குருபரனைத் தொழுதுபோற்றித்
தயவான அனல்மூட்டி யடுப்பிலேற்றே. (௬அ௩)

ஏற்றியே சருகுகம்பு விறகினாலே
இதமாகப் பதினாறுசாமமாட்டி
ஆற்றியே பாண்டமதிலுடைத்து மைந்தா
அதிலிருக்குங் குப்பியைநீயன்பாய் வாங்கி
போற்றியே யுடைத்துப்பார் மதிபோல்காணும்
புதுமையுடன் கிள்ளிப்பார் கல்போல்காணும்
நேற்றியென்ன வைரம்போல் ஒளியேவீசும்
நேர்மையுள வீரனுட வளமைகேளே. (௬அ௪)

கேளப்பா முன்போல கல்வத்திட்டு
கெணிதமுடன் பொடித்து நன்றாய்மாவதாக்கி
தேளப்பா கொட்டுதல்போல் செயநீர்விட்டுத்
திறமாகக் கேசரியைக் குப்பிக்கேற்றி
கேளப்பா வாராமல் பாண்டத்துள்ளே
குணமாக முன்போல குப்பிவைத்து
தாளப்பா மேல்மூடி மண்ணுஞ்செய்து
தப்பாம லடுப்பேற்றி யெரித்திடாயே. (௬அ௫)

எரியப்பா ஈராறு சாமமாட்டி
எரித்தபதங் கட்டியின்மேல் கெல்லைப்போட்டில்
பொரியப்பா எழும்பியது விழுந்துதானால்
புத்தியுள்ள புலத்தியனே பதந்தானென்று
குறியப்பா மறவாமற் பூசைபண்ணிக்
குளிரமட்டும் நீயிறுத்து எடுத்துப் பாரு
வரியப்பா தானேடி வீரந்தானும்
வாககஇரை மடக்குச் சரக்குமாச்சே. (௬அ௬)

ஆச்சப்பா இன்னமொரு மடக்குச்சொல்வேன்
அரகரா முன்போலே கல்வத்திட்டு
தேச்சப்பா பொடித்திடுவாய் மாவதாக
செப்பமுள்ள செயநீரால் மாவைக்கிண்டி

பாச்சப்பா குப்பிதனில் பதனமாகப்
பக்குவமாய்த் தானடைத்து மண்ணுஞ்செய்து
மூச்சப்பா தானடங்க சலாகைபோட்டு
முக்கியமாய் பாண்டமதிற் பதியவையே (சுஅஎ)

வையப்பா அடுப்பேற்றித் தீயைமூட்டி
வரிசையாய் முன்போல வெடுத்துமைந்தா
பையப்பா அறுசாமமெரித்த பின்பு
பக்குவமாய் சலாகைதனை திருப்பும்போது
கையப்பா சாயாமல் விதானமாகக்
கைமுறையாய் திருகியபின் சலாகைவாங்கி
செய்யப்பா மேல்மூடி சீலைசெய்து
திறமாகத் தீயெரித்து இறக்குவாயே. (சுஅஅ)

இறக்கிய பின்னுறவிட்டு எடுத்துப்பாரு
இறுகி வெகுவலுவாக இருக்கும்வீரம்
உருக்கமுள்ள வீரமென்ன வீரமென்றால்
உத்தமனே சௌவீர மிதுவேயாச்சு
கருக்கவென்ற கருக்கவெல்லாம் வீரம்வீரங்
கருவாக வின்னமொரு மடக்குக்கேளு
பெருக்கவே சௌவீரக்கட்டி வாங்கி
பெருமையுள்ள செயநீரில் தோய்த்துப்போடே

(சுஅகூ)

போடப்பா ரவிமுகத்தில் பத்துமுறைதானும்
புகழான வீரமதுவென்ன சொல்வேன்
நாடப்பா செயநீரின் வலுவினாலே
நாவடங்கா வீரவலு வென்னசொல்வேன்
தேடப்பா வீரமென்ன சிரமேதென்றால்
சிவந்த மஞ்சள்நிறமாகு மைந்தாபாரு
கூடப்பா மஞ்சள்நிற வீரனைத்தான்
கொடுமையுள்ள சுன்னமதில் சிகப்புமாச்சே.

(சுகூ0)

ஆச்சப்பா இவ்வீரங் கொச்சிவீரம்
ஆரறிவார் கொச்சியுட ஆழந்தன்னை
நீச்சப்பா வெகுநீச்சுக் கரையேகாணேன்
நினைத்தசுன்ன மகாரமதற்காதியாகும்
பாச்சப்பா கவுனரஸ மணிக்குநல்ல
பாங்கான சாரணைக்கு மிதுவேமூலம்
வாச்சப்பா வேதையுட வீரம்வேணும்
வலுவான நீர்மெழுகுக் காதிதானே. (௬௩)

## தொட்டிப் பாஷாண வைப்பு.

பாரப்பா தொட்டிப்பாஷாணந் தன்னைப்
பண்பாக வைக்குமுறை பகரக்கேளு
காரப்பா சீனமுடன் பூரங் கூட்டிக்
கருவாக வெடியுப்புக் கூடச்சேர்த்து
சாரப்பா சூதமொடு நாகஞ்சேர்த்துத்
தயவாகயங்தெடைக்குக் காந்தங்கூட்டி
வீரப்பா தானடங்க வெண்கருவாலாட்டி
மென்மையுட னிரும்பகலில் வைத்துமூடே (௬௪)

மூடப்பா சட்டிக்குள்ளிரும்பகலை வைத்து
மூர்க்கமுடனுப்பிட்டு மேலுமூடி
வீடப்பா பெலப்பதற்கடுப்பிலேற்றி
விசையாக மூச்சாம மெரித்துவாங்கி
பாடப்பா ஒன்றுமில்லை யாறவிட்டுப்
பக்குவமா யுடைத்தெடுக்க மைந்தாகேளு
தேடப்பா தொட்டிபாஷாண மென்பார்
செகத்தோர்க்கு இந்தமுறை தெரியாதன்றே (௬௫)

## நாக வைப்பு.

பாரப்பா நாகமென்ற முறையைக் கேளு
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாமைந்தா
தேரப்பா தேகமென்ற வெண்ணுகந்தான்
சேர்ந்துநின்ற கருநாகமுயிரு மாச்சு

வேரப்பா யிருவகையுமொன்றே யாகும்
வெடியுப்பு நாலிலொன்று சூதம்ரெண்டுங்
காரப்பா கருவுப்பு நாகப்புற்றுக்
கல்லுப்புக் குன்றிமணி பருப்புங்கூட்டி (எகரு)

கூட்டியே யிடைசமனுய்க்கல்வத்திட்டுக்
குருவான கருவாலே ஆட்டிக்கொண்டு
மாட்டியேதகை பிடித்துக் குகைக்குள்வைத்து
மைந்தனே துருசிட்டுவுலையில்வைத்து
நாட்டியே யுலையில்வைத்து பூசும்போது
நன்மையுட னுருகியல்லோ தெளியும்பாரு
வாட்டியே பதங்கண்டு தெளிந்ததானல்
வயிரம்போல் கண்விழுந்த நாகமாச்சே. (எகசு)

நாகமென்ற நாகமதையார்தான் காண்பார்
நல்லோர்களறிவார்கள் மற்றேர்காணர்
தேகமென்ற தேகமதிலுயிர்தானின்ற
திறமான வுடலாவிகாணர் காணர்
பாதமென்ற வுடலாவி தனக்குமைந்தா
பண்பான பொருளதுவுங் காணமாட்டார்
ஆகமென்ற பொருளதனைக் கண்டாரானல்
அப்பவல்லோ வாதசித்தி நாகமாச்சே. (எகள)

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம் | செய்யுள் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | (௨) | அழிந்துமாதா | அழிந்துமாதர் |
| 4 | (௰௪) | கரிமாவுஞ்மயங் | கரிமாவும் மயங் |
| 8 | (௨௮) | மடபதிகளெல்லாம் | மடபதிகளெல்லா |
| 9 | (௩௨) | கலலானசெருவை | கல்லானசேர்வை |
| 17 | (௬௧) | குதையாகப் | குகையாகப் |
| 21 | (௭௬)வது செய்யுளிலும் ஒரு அடி காணவில்லை | | |
| 22 | (௭௯) | ஆதலையிண்பாலுர் | ஆதலையின்பாலுர் |
| ,, | ,, | பாழான | பாழாண |
| 23 | (௮௩) | யொளகியதோர் | யொள்கியதோர் |
| ,, | (௮௫ | தாயல்லோ | தாங்கியல்லோ |
| 24 | (௮௮) | அமுறதத்தை | அமிர்தத்தை |
| | | இச்செய்யுளில் ஒரு அடி அதிகமாக இருக்கிறது. | |
| 27 | (௯௭ வது செய்யுளில் கடைசி வரி சரியாக இல்லை. | | |